# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக 'உண்ண' வேண்டுமே!

## உங்களுக்குத் தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்™

உங்களுக்குள் இன்னொரு புதிய உயிர், உங்கள குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் உங்கள் ஆரோக்கியத்திற்கும், சிசுவின் வளர்ச்சிக்கும் போதுமான கூடுதல் ஊட்டச்சத்துக்கள் தேவை.

காம்ப்ளான்–விட்டாமில்க் உங்களுக்கும், பிறக்கப்போகும் உங்கள் குழந்தைக்கும், தேவையான ஊட்டச்சத்துக்களையும் மற்றும் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களையும் கொண்டது. இதில் ஃபோலிக் ஆஸிடு, பால் புரதம் (22.2 கிராம்), வைட்டமின்கள் A, $B_6$ மற்றும் C, இரும்புச் சத்து, அயோடின், கால்ஷியம், ஜிங்க் மற்றும் மக்னீஷியம், தேவையான அளவில் அடங்கியுள்ளது.




ரெகுலர் * சாக்லேட்

தினமும் 2 கப்புகள்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/91/R-TAM



# விருது பெற்ற 'மறுபக்கம்'

சென்ற ஆண்டின் சிறந்த திரைப்படத்துக்கான விருது தூரதர்ஷனும் என்.எப்.டி.சி.யும் சேர்ந்து தயாரித்துள்ள 'மறுபக்கம்' தமிழ் சினிமா (டெலிஃபிலிம்)வுக்குக் கிடைத்துள்ளது. இப் படத்தின் ஹீரோ சிவகுமார். அவரைச் சந்தித்தோம்.

''கற்பகம் ஸ்டுடியோவில் மறுபக்கம் படத்தின் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தது. எனக்கு வேம்பு ஐயர் என்ற பிரதான பாத்திரம். நரைத்த தலைமுடி, சற்றே கோரமான பல் (படம்) இவற்றுடன் நான் செட்டில் இருந்த போது, வேறு ஒரு படத்தில் நடித்துக் கொண்டிருந்த கே. ஆர். விஜயா அங்கே வந்தார். நான் அவர் அருகில் சென்று வணக்கம் கூறிய போது, அவரும் பதிலுக்கு வணக்கம் கூறினாரே யொழிய, என்னை அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை. நான் அவர் பக்கத்தில் உட்கார்ந்த போதும்... ஊகூம்... என்னை அவருக்குத் தெரியவில்லை. நான் லேசாய் அவருடைய கைகளைப் பற்றி, 'என்னம்மா! என்னைத் தெரியவில்லையா?' என்று கேட்ட போதுதான் அவர் என் குரலை வைத்து, என்னை அடையாளம் தெரிந்து கொண்டு ஆச்சரியப்பட்டார்.

இதே போல, என் வேம்பு அய்யர் மேக் அப்பைப் பார்த்து அசந்த இன்னொருவர் இயக்குனர் கே. எஸ். கோபாலகிருஷ்ணன்!

''இந்திரா பார்த்தசாரதி எழுதிய 'உச்சி வெயில்' என்ற சிறுகதையைத்தான் என்.எஃப்.டி.சி. மற்றும் தொலைக்காட்சிக்கென இயக்குனர் சேதுமாதவன் மறுபக்கம் என்ற பெயரில் திரைப்படமாய் எடுத்தார். இது ஒரு லோ பட்ஜெட் படம். மொத்த ஷூட்டிங்கும் இருபத்தி ரெண்டு நாட்களுக்குள் முடிந்து விட்டது. சுமார் ஒன்றரை மணி நேரப் படம் இது...'' என்றவர் படத்தின் கதையையும் சொன்னார்.

''மரணத்தை எதிர்நோக்கியிருக்கும் ஒரு முதியவரின் மனப் போராட்டம்தான் மறுபக்கம். உணர்ச்சி பூர்வமான கதை என்றாலும் கூட, யதார்த்தம் படம் முழுக்கப் பரவியுள்ளது. நான் இந்தப் படத்தில் எப்படி நடிக்க வேண்டும் என்று கேட்ட போது, இயக்குனர் சொன்ன அட்வைஸ்: முதியவராய் இருங்கள்; இளையவராய் நடியுங்கள்!

''ராதாவுக்கு இது முற்றிலும் மாறுபட்ட ஒரு படம். நவீனம் நிறைந்த அபயம் என்ற கேரக்டராகவே படத்தில் வாழ்ந்திருக்கிறார் ராதா. முதல் மரியாதை போல, அவருடைய நடிப்பு இதில் பேசப்படும். அசல் கும்பகோணத்து பிராமண குடும்பத்துப் பெண்மணியின் பிரதிபலிப்பு ஜெயபாரதி. செட்டில்தான் முழு படமும் எடுக்கப்பட்டது என்றாலும் மண்வாசனை மாறவில்லை என்பது குறிப்பிடப்பட வேண்டிய விஷயம். லைட்டிங் மூலமே மரண பயம், ரம்யமான இரவுப் பொழுது, சந்தோஷம், துக்கம் இவற்றைக் கொண்டு வந்திருக்கிறார் கேமராமேன் வசந்த குமார். படத்துக்கு இந்திரா பார்த்தசாரதியே வசனம் எழுதியிருக்கிறார்.

''என்னைப் பொருத்தவரை சிந்து பைரவி, இனி ஒரு சுதந்திரம் போல — அவற்றில் காணப்பட்ட சிறு சிறு குறைகளையும் திருத்திக் கொண்டு — இதில் நடித்திருக்கிறேன். எனக்குத் திருப்தி ஏற்படுத்திய படம் இது.''

* இயக்குனர் சேதுமாதவன்



**கொசுறு:**

- மறுபக்கம் படம் பார்த்த நடுவர் குழுத் தலைவர் அசோக்குமார், உணர்ச்சி வசப்பட்டுக் கண் கலங்கி விட்டாராம்.
- ஜெயபாரதிக்கு, நடிப்புக்காக நடுவர்களின் சிறப்புப் பரிசு கிடைத்துள்ளது.
- இயக்குனர் சேதுமாதவன் தமிழ் தவிர கன்னடம், மலையாளம், இந்தி, சிங்கள மொழிகளில் படங்களை இயக்கியவர். நான்கு முறை ஏற்கெனவே தேசிய விருது பெற்றவர்.

சந்திப்பு: மௌனி

# சந்திரசேகர்:

# ஏன் இந்த வீழ்ச்சி?

டாக்டர் ராம் மனோகர் லோஹியாவை அரசியல் குருவாக வரித்துக் கொண்டவர்; தமது புரட்சிகரமான சோஷலிசக் கொள்கைகளால் 'இளம் துருக்கியர்' என்று நேரு காலத்திலேயே புகழப்பட்டவர்; ஜெயபிரகாஷ் நாராயணின் நம்பிக்கைக்குரியவர்; எமர்ஜென்ஸியை எதிர்த்துச் சிறை சென்றவர்; நாட்டின் தெற்கு முனையிலிருந்து வடகோடி வரை பாதயாத்திரை செய்து செல்வாக்கை வளர்த்துக் கொண்டவர்; கொள்கைகளை முன்வைத்து அரசியல் நடத்தியவர்... என்கிற அத்தனை பெருமைகளையும் பொக்கென ஓர் கணத்தே போகத் தொலைத்து விட்டார் பிரதமர் சந்திரசேகர். ஜெயபிரகாஷ் நாராயணின் வாரிசு என்கிற உன்னத நிலையிலிருந்தவர், ஜனதா தளத்தை உடைத்ததன் மூலம், ராஜ்நாராயணின் வாரிசு என்கிற அளவுக்கு ரொம்பவும்தான் தாழ்ந்து போய் விட்டார்!

கடந்த தேர்தலில் எந்த இ.காங்கிரஸுக்கு எதிராக மக்கள் வாக்களித்தார்களோ, அதே இ. காங்கிரஸின் ஆதரவுடன் பிரதமரான போது, அத்தனை இந்தியர் முகங்களிலும் ஒட்டுமொத்தமாகக் கரியைப் பூசி விட்டார் சந்திரசேகர். இருப்பினும் ''அதை நாம் அப்படி எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை!'' என்கிறார் பத்திரிகையாளர் டி. ஆஞ்சநேயலு.

''வி. பி. சிங் பிரதமராக, இடதும் வலதுமான கொள்கை முரண்பாடுகளுடைய பாரதிய ஜனதா மற்றும் கம்யூனிஸ்ட் கட்சிகளின் ஆதரவை நாடவில்லையா? அப்படி ஜனநாயக விரோதமில்லையா?

''கட்சியின் பார்லிமெண்ட் உறுப்பினர்கள் தம்மைத்தான் ஆதரிப்பார்கள் என்று மனப்பூர்வமாக நம்பியிருந்தார் சந்திரசேகர். அதனால்தான் அவர் தேர்தலை வலியுறுத்தினார். அவரது நம்பிக்கை தேர்தல் மூலம் தகர்ந்து போயிருந்தால் அவரால் தம்மைச் சுலபமாகச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்க முடியும். ஆனால், ஒரு மோசமான நாடகத்தின் மூலம், தமது எதிராளிகள், தமது நம்பிக்கையைச் சிதறடித்ததை அவரால் எப்படி ஜீரணித்துக் கொள்ள முடியும்?

''அதுவும் சந்திரசேகருக்குத் தமது திறமையின் மேல் அபார நம்பிக்கை. பிரதமர் பதவி தவிர, மற்ற பதவிகள் எதுவும் தமது தகுதிக்குப் பொருத்தமானதல்ல என்று தமக்குத் தாமே தீர்மானம் செய்து கொண்டு, அதில் உறுதியாகவும் இருப்பவர். அதனால்தான் அவர் இதுவரை மற்ற அரசாங்கப் பதவிகள் எதையுமே வகிக்க விரும்பவில்லை.

''இந்த நிலையில் அவர் ஏமாற்றப்பட்டார் என்கிற போது, அவரது மனோநிலை எப்படியிருந்திருக்கும்! அதுவும் மண்டலும் மந்திரும் நாட்டையே உலுக்கிக் கொண்டிருக்கும் பிரச்னைகளாக உருவாகியிருந்த போது, தம்மால்தான் அவற்றைத் தீர்த்து வைக்க முடியுமென்று நம்பினார். அதன் காரணமாகத்தான் இ. காங்கிரஸ் ஆதரவு கிடைத்த போது, கட்சியைப் பிளக்க அவர் தயங்கவில்லை.

''இப்படிக் கட்சியை அவர் பிளவுபடுத்தியதும் மன்னிக்க முடியாத குற்றமல்ல. 'பார்லிமெண்டரி ஜனநாயகத்தின் தாயகம்' என்று வர்ணிக்கப்படுகிற இங்கிலாந்தில் முதலாம் உலகப் போரின் போது என்ன நடந்தது? அப்போது ஆட்சிப் பொறுப்பிலிருக்கும் போது, இ. காங்கிரஸும் அதன் தோழமைக் கட்சிகளும் தாங்களாகவே முன் வந்து சந்திரசேகருக்கு ஆதரவு தந்த போது அதை ஏற்றுக் கொண்டதில் என்ன தவறு?'' என்கிறார் அவர்.

''இது மட்டுமல்ல; ஜனதா தளம் பிளவுபட்டதற்கான மூலகாரணமும் சந்திரசேகர் அல்ல என்று உறுதியாகச் சொல்லலாம். சென்ற பொதுத் தேர்தல் முடிந்தவுடன், ஜனதா தளம் தனது பார்லிமெண்டரி தலைவரைத் தேர்தல் மூலம்தான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றார் சந்திரசேகர். ஆனால் நடந்தது என்ன? சந்திரசேகரின் கருத்துக்கு எதிராக ஒரு நாடகத்தை நடத்தித்தான் வி. பி. சிங்கைத் தேர்ந்தெடுத்தார்கள். அதுவிருந்த லிபரல் கட்சி, லாயிட் ஜார்ஜ் என்பவர் தலைமையில் இரண்டாகப் பிளந்தது. லாயிட் ஜார்ஜ் பிரதமரானார். யுத்த காலமான அந்தச் சமயத்தில் அவர் செயலாற்றிய விதம், அவரை தேசத்தின் ஹீரோவாக்கி விட்டது. அது போலத்தான் இப்போது சந்திரசேகர் பிரதமரான பிறகு, நாட்டை எதிர்நோக்கியிருந்த பிரச்னைகளின் இறுக்கத்தைத் தளர்த்தியிருக்கிறார்!'' என்கிறார் பத்திரிகையாளர் ஆஞ்சநேயலு.

ஆமாம்! நாட்டிலுள்ள இறுக்கம் சந்திரசேகர் பிரதமரான பிறகு தளர்ந்து போய்த்தான் இருக்கிறது! இல்லையென்றால் வி. பி. சிங் ஆட்சியிலிருந்த பதினொரு மாத



காலமும் வெளிநாடுகளிலேயே வசித்து வந்த சந்திராசுவாமி, சந்திரசேகர் பதவியேற்ற பதினைந்து நாட்களிலேயே இந்தியாவுக்குத் திரும்பியிருப்பாரா? சி. பி. ஐ. மற்றும் அமல் பிரிவு இயக்குநரகத்தின் புலனாய்வு விசாரணைக்கு ஆளாகியிருக்கும் அவர், வாரண்டுகளையும் சம்மன்களையும் ரொம்ப ரொம்ப அலட்சியமாகப் புறந்தள்ளி விட்டு, அயோத்திப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதாகக் கூறிக் கொண்டு, ஒரு நாள் விஷ்வ ஹிந்து பரிஷத் உறுப்பினர்களுடன் அயோத்தியில் பேச்சு வார்த்தை; மறுநாள் முஸ்லிம் தலைவர்களுடன் ஹைதராபாத்தில் பேச்சு வார்த்தை என்று நாடு முழுவதும் சர்வ சுதந்திரமாகச் சுற்றிக் கொண்டிருப்பாரா?

சந்திராசுவாமியைப் போலவே, அவரது சிஷ்யன் என்று சொல்லிக் கொள்கிற, அகில உலகத் தரகு வியாபாரி அட்னன் கஷோக்கிதான் இந்தியா வந்திருப்பாரா? அதுவும் அயோத்திப் பிரச்னையைத் தீர்ப்பதாகச் சொல்லிக் கொண்டு! போலி ஆவணங்களைத் தயாரித்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சுவிட்சர்லாந்தில் கைது செய்யப்பட்ட அவரோடு சேர்ந்து, பிரதமர் சந்திரசேகரும் விருந்துண்டிருப்பாரா?

''இதையும் நீங்கள் இப்படிப் பார்க்க வேண்டியதில்லை!'' என்கிறார் ஆஞ்சநேயலு. ''பிரதமர் என்கிற முறையில் அவர் அனைவரையும் சந்திக்கத்தான் வேண்டும். அப்படியொருவரைச் சந்திக்கும் போது, அந்த நபர் பிரதமர் மேல் செல்வாக்குச் செலுத்தும் நபராகி விடக் கூடாது என்பது தான் விஷயம். இந்த நிலையில் பிரதமர் கஷோக்கியைச் சந்தித்ததில் என்ன தவறு?'' என்கிறார் அவர்.

இதை நம்மால் ஒப்புக் கொள்ள முடியவில்லை! 'இப்படியெல்லாம் பெயர் வாங்கியுள்ள ஒருவருடன் நான் பழக மாட்டேன்!' என்று கஷோக்கியுடனான விருந்துக்குப் போக மறுத்து விட்டார் எல். கே. அத்வானி. ஒரு கட்சித் தலைவரே இத்தனை ஜாக்கிரதையாக இருக்கும் போது, ஒரு பிரதமர் எத்தனை ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!

''சந்திரசேகர் பதவியேற்றதும் நாட்டிலுள்ள எல்லாப் பிரச்னைகளும் அடங்கிப் போய் விட்டது போல் சில பத்திரிகைகள் எழுதுகின்றன. ஓர் அரசு செயல்படாமல் இருக்கும் போது பிரச்னைகள் எப்படி எழும்? சந்திரசேகர் அரசு செயல்படாத அரசு. சந்திரசேகர் எடுத்துக் கொண்டது பிரதமர் பதவியை மட்டும்தானே தவிர, அதற்குரிய பொறுப்புக்களையல்ல. தமக்குப் பொறுப்புக்கள் இருப்பதாக அவர் நினைத்திருந்தால் முழு பட்ஜெட்டையுமல்லவா அவர் சமர்ப்பித்திருக்க வேண்டும். இடைக்கால பட்ஜெட் என்பது ஃபிராட் இல்லையா?'' என்று கேட்கிறார் 'ஹிந்து' இணையாசிரியர் என். ராம்.

உண்மைதான். எல்லாத் துறைகளுக்கும் அமைச்சர்களை நியமிப்பதற்குக் கூட அவரது கட்சியில் எம். பி.க்கள் இல்லாததால் எல்லா வேலைகளும் ஸ்தம்பித்துப் போய்க் கிடக்கின்றன. காபினட் அந்தஸ்துள்ள பதினைந்து அமைச்சர்கள் வகிக்க வேண்டிய முக்கியமான இலாகாக்களையெல்லாம் வேறு வழியின்றிச் சந்திரசேகரே வைத்திருக்கிறார். சாதாரணமாகவே இத்தனை இலாகாக்களையும் ஒருவரால் கவனிக்க இயலாது என்கிற சூழ்நிலையில், தமது பதவியைத் தக்கவைத்துக் கொள்வதே ஒரு பெரும் வேலை என்கிற நிலையிலிருந்த

சந்திரசேகர் என்ன செய்வார்? அதனால் மிக முக்கியமான விஷயங்களில் கூட முடிவுகள் எடுக்கப்படாமலேயே கிடக்கின்றன. உள்துறை, வெளியுறவுத் துறை, தொழில் துறை என்று எல்லாமே தூங்கிக் கிடக்கின்றன.

''ஆனாலும் ராஜீவ் காந்தியை விடச் சந்திரசேகர் புத்திசாலி!'' என்கிறார் என். ராம். ''ராஜீவ் காந்தி, தாம்தான் சந்திரசேகரைக் கவிழ்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தார். சந்திரசேகர் அதற்கு முன்பே தமது ராஜினாமாவைச் சமர்ப்பித்ததன் மூலம், அவரை விடத் தாம் புத்திசாலி என்பதை நிரூபித்து விட்டார். அதோடு, சந்திரசேகருக்கு வந்துள்ள இந்தச் சூழ்நிலை ராஜீவ் காந்திக்கு வந்திருந்தால் நிச்சயம் அவர் தமது ராஜினாமாவைச் சமர்ப்பித்திருக்கவே மாட்டார்; கடைசி வரை பதவியில் ஒட்டிக் கொண்டிருக்கவே முயலுவார். சந்திரசேகரோ அப்படிக் கடைசி நிமிஷம் வரை காத்திருக்காமல், அதற்கு முன்பாகவே ராஜினாமாச் செய்ததன் மூலம், ராஜீவை விடவும் தாம் கண்ணியமானவர் என்பதையும் நிரூபித்து விட்டார். இந்த ஒருவகையில் மட்டும் சந்திரசேகரைப் பாராட்டலாம்!'' என்று சொல்லுகிற என். ராம், முன்பு கொள்கைகளை முன்னிறுத்தி அரசியல் நடத்திய பழைய சந்திரசேகரையும் மறக்கவில்லை. புகழவே செய்கிறார். பிறகுதான் சுப்பிரமணிய சுவாமி போன்றவர்கள் அவரைத் தவறான பாதைகளுக்கு வழிகாட்டிக் கெடுத்து விட்டதாகக் கூறுகிறார்.

இ. காங்கிரஸிலிருந்து வி. பி. சிங் வெளியேற்றப்படும் வரை சந்திரசேகர் நல்லபடியாகத்தான் இருந்தார். இ. காங்கிரஸை எதிர்த்து நிற்கும் அணியில் தாம்தான் முக்கியமானவர் என்று நினைத்திருந்தார். அதில் ஓரளவுக்கு உண்மையும் இருந்தது!

இந்தச் சூழ்நிலையில்தான் 'போஃபோர்ஸ், ஃபேர்ஃபாக்ஸ்' என்று அதிரடியாக நாட்டு மக்களிடம் பிரபலமாகி, இ.காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்பட்டார் வி. பி. சிங். ராஜீவ் காந்தியின் பரிசுத்த இமேஜை வி. பி. சிங் தவிடுபொடியாக்கினார். அதனால் மக்களிடமும் அவருக்கு நியாயமான முறையில் செல்வாக்கு வளர ஆரம்பித்தது.

வி. பி. சிங்கின் இந்தத் திடீர்ப் பிரபலத்தைச் சந்திரசேகரால் ஜீரணிக்க முடியவில்லை. அவரது பிரபலம் தம்மை ஓரங்கட்டி விடும் என்று பயந்தார். அதனால், 'என்ன இருந்தாலும் வி. பி. சிங் இ. காங்கிரஸில் இருந்து வெளிவந்தவர்தானே! எமர்ஜென்ஸியின் போது வாயை மூடிக் கொண்டு அதை ஆதரித்தவர்தானே!' என்றெல்லாம் விமர்சனம் செய்ய ஆரம்பித்தார். ஆயினும் அதெல்லாம் மக்களிடம் எடுபடவில்லை.

இந்தச் சூழ்நிலையிலும், இந்த நாட்டின்



## ராஜாஜி கூறிய பதில்

○ யார் கடிதம் போட்டாலும் அதற்கு உடனே பதில் எழுதி விடுவார் ராஜாஜி. ''ஒரிரு நாள் கழித்துப் பதில் எழுதினால் என்ன?'' என்று ஒரு நண்பர் கேட்டதற்கு ராஜாஜி கூறிய பதில்: ''டெலிபோனில் ஒருவர் கூப்பிட்டால் நாளைக்குப் பதில் சொல்கிறேன் என்று தள்ளிப் போடுவோமா? இந்த ஆசாமிக்கு டெலிபோன் வசதி இல்லை. அதனால் கடிதம் எழுதுகிறார். அதற்கு மட்டும் நாளைக்குப் பதில் போட்டால் எப்படி?''

— பி. ராஜசேகரன்.

● ● ● ●

○ மனஸ்தாபம் கொண்டிருந்த கணவன், மனைவியும் அவர்களது பெற்றோர்களும் குடும்பக் கோர்ட்டின் முன் ஆஜரானார்கள். பையனின் அம்மா 'சூசகமாக' ஏதோ கூறப் போக, அது பெண்ணின் அம்மாவுக்குக் கடும் கோபத்தை ஏற்படுத்தியது. அவள் உடனே தனது சம்பந்தி அம்மாளைக் கன்னத்தில் 'பளார்' என்று ஒன்று விட்டாள். இதைப் பார்த்துக் கொண்டிருந்த பையன், தனது மாமியாரின் கன்னத்தில் பளார் என்று ஓர் அறை! அதைப் பார்த்தவுடன் பெண்ணின் அப்பா, தனது மாப்பிள்ளையின் கன்னத்தில் பளார் என்று அறைய, பையனின் அப்பா பெண்ணின் அப்பாவுக்குப் பதில் தர, ஒரே ரகளைதான்!'' நீதிபதி எவ்வளவோ முயன்றும் இந்த ரகளையை நிறுத்த அவரால் முடியவில்லை. அடுத்த ரவுண்டு அறை விட்டுக் கொண்டிருந்தார்கள். வெறுத்துப் போய்க் குடும்ப நீதிபதி சொன்னது: 'It is difficult to educate the educated.'

ஆதாரம்: ஹிந்து.

— எம். எஸ். நளினி.

○ சென்னை பாம்புப் பண்ணையில் பாம்பிற்கு உணவு தரவேண்டும் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. ஆனால், கூண்டுகளில் உயிருடன் விடப்படும் கோழிக்குஞ்சுகளையும் எலிகளையும் பாம்புகள் உண்பதை நேரில் காணும் பொழுது கொடூரமாய் இருக்கிறது. கோழிக் குஞ்சுகளும் எலிகளும் அவலக் குரல் எழுப்பிப் பாம்புகளுடன் ஜீவ மரணப் போராட்டம் நிகழ்த்தியதை நினைக்கும் போதே வேதனை மேலிடுகிறது. இதற்கு மாற்று ஏற்பாடு செய்ய இயலாதா?

— வி. எஸ். வாசன்.

# ஃபாரெக்ஸ்-எக்
# பாலைப் போன்றே
# ஜீரணிக்க எளிது !

ஆறு மாதம் முதற்கொண்டு
உங்கள் குழந்தைக்கு முட்டை,
பால் இரண்டிலுமே உள்ள புரதச்
செழுமையை ஒரே ஆகாரத்தின்
மூலம் அளியுங்கள்.

உங்கள் குழந்தையின்
மென்மையான செரிக்கும்
நிலைக்கேற்றவாறு முன்கூட்டியே
பக்குவப்படுத்தப்பட்டுள்ள
ஃபாரெக்ஸ்-எக் அவன்
எளிதில் ஜீரணிக்கக்
கூடியதாகும்.

**புரதம் செறிந்தது**




**ஃபாரெக்ஸ்:**
**சுவையுடன் வளரும் வழி.**

Gx/188.90 Tml.

பிரதமர் பதவிக்குத் தம்மை விடத் தகுதியானவர் யாருமே இல்லை என்கிற அவரது சுயகணிப்பும் கற்பனையும் மாறவேயில்லை. அதனால்தான், வி. பி. சிங்கை நாயகனாகக் கொண்டு தேசிய முன்னணி வெற்றி பெற்றபோதிலும் தாமும் பிரதமர் பதவிக்குப் போட்டியிட விரும்பினார். அது நடக்காமல் போகவே வாய்ப்புக்காகக் காத்திருந்தார். வி. பி. சிங் அரசு தமது டெலிபோனை ஒட்டுக் கேட்பதாகக் குற்றம் சாட்டினார். (அண்மையில் வெளியான சி. பி. ஐ. அறிக்கை அவரது குற்றச்சாட்டுக்கு ஆதாரமே இல்லை என்று கூறி விட்டது) சுப்பிரமணிய சுவாமி போன்ற துர்தேவதைகளின் அதீத சகவாசம், கடைசியில் கட்சியையே பிளக்கும் அளவுக்குக் கொண்டு போய் விட்டது!

இன்றைக்கு எல்லாமே போய் விட்டது. தமக்கிருந்த உன்னதமான மரியாதைகளையெல்லாம் இழந்த நிலையில் தன்னந்தனியாக நிற்கிறார் சந்திரசேகர். குறுக்கு வழிகளுக்குத் தூபம் போட்டவர்களில் பலரும் தங்களது பதவிகளைக் காப்பாற்றிக் கொள்வதற்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராகி விட்டார்கள். சந்திரசேகரை 'அம்போ' என்று விட்டு விட்டுக் கட்சி தாவவும் பிராந்தியக் கட்சி தொடங்கவும் இ. காங்கிரஸுடன் கூட்டணி அமைக்கவும் தயாராகி விட்டார்கள்.

ஆனாலும் இவர் சோர்ந்து போய் விட்டதாகத் தெரியவில்லை. தமது அமைச்சரவையை விஸ்தரிப்பதற்கே ஆள் கிடைக்காமல் திண்டாடியவர், ஐந்நூறு தொகுதிகளில் தமது கட்சி போட்டியிடும் என்று அறிக்கை விடுகிறார். 'புரட்சி என்பது பிரதமர் அலுவலகத்திலிருந்தோ, பணக்காரர்களிடமிருந்தோ புறப்பட்டு வருவதல்ல; அது ஏழைகளின் குடிசைகளிலிருந்துதான் புறப்பட்டு வரும்' என்று பழையபடி லோஹியாவின் தீவிரமான சிஷ்யனைப் போல் சோஷலிசம் பேசுகிறார். 'மத்தியிலேயே அதிகாரங்கள் குவிந்து கிடக்கக் கூடாது. அது உள்ளாட்சி மன்றங்கள் வரை பரவலாக்கப்பட வேண்டும்' என்று புதிய ஞானோதயத்தோடு பேட்டி கொடுக்கிறார். பொதுக் கூட்டங்களில் பேசும் போது, ஒரு புறா சொல்வது போல் கவிதை சொல்கிறார்: ஏ, மின்னலே, என்னைப் பயமுறுத்த வேண்டாம்! நீ எத்தனை முறை எனது கூட்டை — ராஜாங்கத்தைக் கலைத்தாலும் எனக்குக் கவலையில்லை. ஏனெனில் எனது உண்மையான சொத்து ராஜாங்கம் அல்ல; சிறகுகள்!

கவிதை நன்றாகத்தான் இருக்கிறது. கேட்பவர்களுக்கும் படிப்பவர்களுக்கும் தன்னம்பிக்கையை வளர்க்கும் அற்புதமான கவிதைதான் அது. ஆனால் அது எல்லாவற்றையும் இழந்து நிற்கும் சந்திரசேகருக்குப் பொருந்துமா என்பதுதான் கேள்வி!

**— இளங்கோவன்**

அட்டை வண்ணப்படம்: **சுபா**

# பழைய நபர்; புதிய பெயர்!

| பழைய நபர் | புதிய பெயர் (விளக்க உரையுடன்) |
| --- | --- |
| சவுதாலா  | சவ்வுதாலா: (அரசியலில் ஆபத்தானவர் என்று தெரிந்தும் உதற முடியாமல் சவ்வு மாதிரி ஒட்டிக் கொள்வதால்.) |
| தேவிலால்  | தாவிலால்: (சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி தாவத் தெரிந்தவர்) |
| ஸ்டாலின்  | ஸ்டார்லின்: (ஸ்டார் ஆக்கப் பார்க்கிறார்கள்.) |
| ஜெயலலிதா  | பய லலிதா: (என்ன செய்வாரோ என்ற பயத்தை மற்றவர்களுக்கு உண்டாக்குவதால்) |
| சந்திரசேகர்  | சந்திரசோகர்: பிரதமர் பதவியும் போய்ச் சொந்தக் கட்சியிலேயே பலர் காலை வாரிவிட்டதால் சோகமாயிருப்பவர்) |
| பங்காரப்பா  | தங்காரப்பா: (நமக்குத் தண்ணீர் தர மறுப்பதால் பதவியில் தங்கக் கூடாதவர்) |

— 'விஜய நிகில்'



# படித்தவரும் வைக்கலாம் கைநாட்டு!



டாகுமெண்டுகள் போன்ற எதிலும் இடது கைப் பெருவிரல் ரேகையை மட்டும் தானே பதிவு செய்கிறோம். மற்ற விரல் ரேகைகளைப் பதிவு செய்வதில்லையே, அது ஏன்? — இந்தக் கேள்வியைத் தடய அறிவியல் துறையின் இயக்குனர் டாக்டர் பி. சந்திரசேகரனிடம் கேட்டோம்.

"இடது கைப்பெருவிரல் ரேகையைத் தான் பதிவு செய்ய வேண்டுமென்று சட்டம் ஏதும் கிடையாது. எந்த விரல் ரேகையை வேண்டுமானாலும் பதிவு செய்யலாம். ஆயினும் இடதுகைப் பெருவிரல் ரேகையை மட்டுமே அனைவரும் பதிவு செய்வதற்குக் காரணமிருக்கிறது!" என்று விளக்க ஆரம்பித்தார் அவர்.

"நமது கை விரல்களின் நுனிகளிலுள்ள ரேகைகளும் சரி, கால் விரல் நுனிகளிலுள்ள ரேகைகளும் சரி, ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. ஒரு மனிதனின் விரல்களுக்கிடையிலேயே மாறுதல்கள் என்றால் வெவ்வேறு மனிதர்களுக்கு இடையிலான விரல் ரேகைகளின் மாறுதல்களைப் பற்றிக் கேட்பானேன்! அதனால் உங்களுக்கு விருப்பமான எந்த விரல் ரேகையை வேண்டுமானாலும் பதிவு செய்யலாம். அப்படிப் பதிவு செய்யும் போது, இந்தக் கையிலுள்ள இன்ன விரல் ரேகை என்று அதன் கீழ் குறிப்பிட வேண்டும்; அவ்வளவுதான்! இப்போதும் இடதுகைப் பெருவிரலை விபத்துக்களில் இழந்தவர்களுக்கு, மற்ற விரல் ரேகையைத்தானே பதிவு செய்கிறோம்!

"இதே போல் ஒருவரின் கை ரேகைகள் சுத்தமாக மறைந்து போகும் வாய்ப்பும் இல்லை. திராவக ஆலை, சுண்ணாம்புக் காளவாய் போன்ற இடங்களில் வேலை பார்ப்பவர்களின் ரேகைகள் மறைய வாய்ப்பிருக்கிறது என்றாலும் அது தாற்காலிக மானதுதான். அவர்கள் அந்தப் பணிகளிலிருந்து சில நாட்கள் விலகியிருந்தால், மீண்டும் பழையபடி அதே ரேகைகள் வந்துவிடும்.

"இந்த நிலையில் நாம் இடதுகைப் பெருவிரல் ரேகையை மட்டுமே பதிவு செய்து கொண்டிருப்பது நமது வசதி கருதித்தான். வலது கைப் பெருவிரல் ரேகையைப் பதிவு செய்ய அதில் மை தடவினால் — என்னதான் கழுவினாலும் அந்த மை முழுமையாகப் போகாது என்பதால், சாப்பிடும் போது அருவருப்பாக இருக்கும் என்பதால் யாரும் வலது கைப் பெருவிரல் ரேகையைப் பதிவு செய்ய முன் வருவதில்லை. இடது கையிலும் மற்ற விரல்களில் மை தடவி உருட்டிப் பதிவு செய்வதைக் காட்டிலும் பெருவிரலில் மை தடவிப் பதிவு செய்வது வசதியாக இருப்பதால் இடது கைப் பெருவிரல் ரேகை என்பது ஒரு பழக்கமாகி விட்டது. இதுதான் விஷயம்.

"கடைசியாக ஒன்று. கைவிரல் ரேகையைப் பதிவு செய்வதென்பது படிக்காத பாமரர்களுக்குத்தான் என்றும் நினைக்கத் தேவையில்லை. ஒருவருடைய கையெழுத்தைப் போல் மற்றவர்கள் சுலபமாகப் போட்டு விட முடியும் என்பதால், சில முக்கியமான டாகுமெண்டுகளில் படித்தவர்களும் தங்கள் கையெழுத்தோடு விரல் ரேகையையும் பதிவு செய்தால் மோசடிப் பிரச்னைக்கே இடமிருக்க முடியாது!" என்றார் டாக்டர் பி. சந்திரசேகரன்.



வாசகர் யோசனை,
பேட்டி : பிரபுசங்கர்,
சென்னை — 11.



# அமரர் கல்கி நினைவாக— பொன்விழா சிறுகதை; நாடகம்; கவிதைப் போட்டிகள்

## சிறுகதைகள்:

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ. 2,000 |
| இரண்டாம் பரிசு | ரூ. 1,000 |
| மூன்றாம் பரிசு | ரூ. 500 |

## நாடகங்கள்:

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ. 1,000 |
| இரண்டாம் பரிசு | ரூ. 500 |

## கவிதைகள்:

| | |
|---|---|
| முதல் பரிசு | |
| (புதுக் கவிதைக்கு) | ரூ. 250 |
| (மரபுக் கவிதைக்கு) | ரூ. 250 |
| இரண்டாம் பரிசு | |
| (புதுக் கவிதைக்கு) | ரூ. 150 |
| (மரபுக் கவிதைக்கு) | ரூ. 150 |

**ஆகமொத்தம் ரூ. 5,800 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

**தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு சிறுகதையும் ரூ. 150 சன்மானம் பெறும்; ஒவ்வொரு நாடகமும் ரூ. 125 ம் ஒவ்வொரு கவிதையும் ரூ. 75 ம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.**

- படைப்பு எதுவாயினும் அது உங்கள் சொந்தக் கற்பனை என்றும் இதற்கு முன் வேறெங்கும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் வேறெதிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.
- கதைகள்; நாடகங்கள்; கவிதைகளைத் தனித்தனியே அவற்றுக்குரிய நடுவர் குழு பரிசீலித்துப் பரிசுக்குரியனவற்றைத் தேர்ந்தெடுக்கும்.

○ **கதைகள், கவிதைகள், நாடகங்கள் ஆகியவற்றை அனுப்பக் கடைசித் தேதி: ஜூன் 15.**

- உறையின் மேல் பொன் விழா சிறுகதை/ நாடகம்/கவிதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டப்பெற்ற சுயவிலாசமிட்ட உறையைக் கதை அல்லது நாடகம் அல்லது கவிதையுடன் இணைத்து அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகளும் நாடகங்களும் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாமல் இருப்பது நலம்.- கவிதை ஒரு பக்கத்துக்குள் அடங்குவதாய் அமைதல் வேண்டும். ஒருவரே ஒன்றுக்கு மேற்பட்ட சிறு கதைகளையோ, நாடகங்களையோ, கவிதைகளையோ அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

○ **போட்டி முடிவும் முதல் பரிசுச் சிறுகதையும் கல்கி ஆகஸ்டு 4வது ஆண்டு மலரில் பிரசுரமாகும். மற்றவை அடுத்து வரும் இதழ்களில்.**

○ **பரிசுகள் பொன்விழா மேடையில் ஆகஸ்டு 3 ஆம் தேதி நடக்கவிருக்கும் தொடக்க தின நிகழ்ச்சியில் வழங்கப் பெறும்.**

○ **எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.**

**ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.**


ஜெயலலிதா
சட்டமன்றத்துக்கு
நான் சொல்ற
எண்ணிக்கையிலதான்
போட்டியிடணும்...
தெரியுதா?
நாடாளுமன்றத்துக்கும்
நான் எத்தனை
தொகுதிகளைக்
கொடுக்கிறேனோ
அவ்வளவுதான்,
புரியுதா?
எந்தெந்த
தொகுதிகளை
நான் ஒதுக்குகிறேனோ
அங்கே மட்டும்தான்
போட்டியிடணும்...
ஜாக்கிரதை!
தமிழக காங்கிரஸ்
ராஜீவ்
ஆஹா,
எவ்வளவு
அழகா
திட்டு
வைக்கிறாங்க!


கோல்
மண்டல்
தான்...
வி.பி.சிங்
இல்லை...
ஆறு அம்ச
திட்டம்தான்
சரி!
சந்திரசேகர்
ராஜீவ்
அத்வானி
ஊஹூம்,
ரொட்டியும்
கோவிலும்தான்...
இவங்க
சண்டை சாக்குச்
சாக்குல நான்
கோல்
போட்டுக்கறேன்...


அந்தக் கப்பல்
காப்டன் ரொம்ப
மோசம்...
அவரை எதிர்த்து
எல்லா மாலுமிகளும்
புரட்சி பண்ணுறாங்க!
ஜனதாதளம் (எஸ்)
ஜனதாதளம்
(தேசிய)
ராஜீவ்
தொட்டி
நாங்க
பிடிச்சாச்சுப்பா...
கப்பல்ல
ஏறிக்கலாம்!



கல்கி

1991 ஏப்ரல் 21
மலர் : 49 இதழ் : 38
பிரஜோத்பத்தி சித்திரை 8




# தமிழக காங்கிரஸின் தலையெழுத்து!

வாழப்பாடியாருக்கும் மூப்பனாருக்கும் சிதம்பரத்துக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்கள். ஏற்கெனவே உட்பூசல்களால் நலிவடைந்துள்ள தமிழக இ. காங்கிரஸ், ஜெயலலிதா அம்மையாரிடம் அகப்பட்டுக் கொண்டு அல்லாடுகிறது!

'நாம் பிரதமராக வேண்டும்; அதற்கு நாடாளுமன்றத்தில் ஆமாம் சாமிகள் வேண்டும்; அதற்காகத் தமிழகத்தை அ. தி. மு. க. தேவதைக்குப் பலிகொடுப்பதானாலும் பரவாயில்லை' என்று சுயநலத் திட்டமிட்ட ராஜீவ், ஏராள சட்டமன்றத் தொகுதிகளை வெள்ளித் தட்டில் வைத்து, வெற்றிலைப் பாக்கு, பழம், புஷ்பத்துடன் ஜெயலலிதாவுக்குக் காணிக்கையாக்கினார்.

'போகட்டும், அடுத்து நாடாளுமன்றத் தொகுதிகளுக்கான பேச்சு வார்த்தைகளின் போது ஜெயலலிதா பெருந்தன்மையுடன் நடந்து கொள்வார்; நமக்கு முன்னை விடக் கூடுதல் தொகுதிகள் கிடைக்கும்' என்று தமிழக காங்கிரஸ் தலைவர்கள் எண்ணினர். அந்த எதிர்பார்ப்பிலும் மண் விழுந்தது. ராஜீவ் வந்தார்; விருந்து உண்டார்; அம்மையார் கொடுத்தது போதும் என்று வாங்கிக் கொண்டார்; "தொகுதிப் பங்கீடு பேச்சு வார்த்தைகள் வெற்றி" என்று அறிக்கை விட்டுவிட்டு டில்லி பறந்து விட்டார்!

'எந்தத் தொகுதி யாருக்கு?' என்று இங்கே தளபதிகள் பிரித்துக் கொள்ள முற்பட்ட போது மறுபடியும் பிறந்தது சிக்கல்! காங்கிரஸ் ஏற்கெனவே வெற்றி பெற்றிருந்த தொகுதிகளைக் கூட அம்மையார் கேட்க, வெற்றி வாய்ப்புக்கள் குறைவாக உள்ள தொகுதிகளைக் காங்கிரஸுக்கு அவர் தள்ளிவிடப் பார்க்க, தமிழகக் காங்கிரஸ் தளபதிகள் அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியுற்று, ஆடிப்போய் விட்டார்கள்! அம்மையாரோ 'பலவானே புத்திமானாவான்' என்று புதுப்பழமொழியை நிரூபித்துக் கொண்டிருக்கிறார்!

வாழப்பாடியார் டில்லிக்குப் பறக்க, மூப்பனாரும் அழைக்கப்பட, இருவருமாக தினேஷ் சிங்குடன் திரும்பி வர, 'ஆகா, போராடப் போகிறார்' என்று எல்லோரும் எதிர்பார்த்திருக்க, தினேஷ் சிங்கோ, "கொடுத்தது போதும்; கிடைத்தது பாக்கியம்" என்று சரணாகதி சிங்கானார்! மறுபடி தமிழகத் தளபதிகள் டில்லி பறந்திருக்கின்றனர். இம்முறை சிதம்பரமும் போயிருக்கிறார்; என்ன சாதிக்கப் போகிறார்?

தமிழகக் காங்கிரஸின் தலையெழுத்தை நிர்ணயிக்கிற பிரும்மாவாக ஜெயலலிதா விளங்குகிறார். எம். ஜி. ஆரிடம் கூட தமிழக காங்கிரஸ் இவ்வளவு அல்லல்பட்டது கிடையாது. ஓரளவு கௌரவம் இருந்தது!

சந்திரசேகர் காலை வாரிவிட்ட காங்கிரஸ்; முலாயம் சிங் யாதவ் காலை வாரிவிட்ட காங்கிரஸ்; சிம்மன்பாய் பட்டேலைக் 'காலை வாரிவிடுவேன்' என்று அச்சுறுத்தி, நாடாளுமன்றத் தொகுதிகளைப் போட்டியின்றிப் பெற்றுக் கொண்ட காங்கிரஸ், தமிழகத்தில் 'ஜெ'யினால் கால்வாரி விடப்பட்டுக் குப்புற விழுந்து கிடக்கிறது. வல்லவனுக்கு வல்லவன் நானிலத்தில் உண்டு!

'கொடுத்தது போதும் கிடைத்தது லாபம்' என்று பெற்றுக் கொண்டு, ஜெயின் செல்வாக்கினால் தமிழக இ. காங்கிரஸ் காரர்கள் சில பல நாடாளுமன்ற, சட்டமன்றத் தொகுதிகளில் வெற்றி பெறத்தான் போகிறார்கள். ஆனால் இத்தகைய வெற்றியில் என்ன பெருமை இருக்கிறது? இதைவிடக் குறைந்த தொகுதிகளில் வென்றாலும் தன்மானத்துடன் அதனை அடைந்து, ஆட்சிப் பணி இல்லாவிட்டாலும் கௌரவமான எதிர்ப்புப் பணி ஆற்றுவதே சிறந்தது.

சரணாகதி தத்துவம் சாமி கும்பிடும்போது நல்ல பலன் தரும். சாமானியரிடம் அல்ல. கஷ்டநஷ்டங்கள் இருந்தாலும் தன்மானத்துடன் போராட வேண்டும். பரஸ்பரம் விட்டுக் கொடுப்பதிலும் கௌரவம் காக்கப்பட வேண்டும். ஒரேயடியாகக் குனிந்தால், குட்டக் குட்ட வாங்கிக் கொள்ள வேண்டியதுதான்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



"அரசியல் கட்சிகளிடையே தார்மிக ஒப்பந்தத்தின் அடிப்படையில் தேர்தல் நெறிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. (படிக்கிறார்). இவற்றை மீறுவதாக மக்களிடமிருந்து புகார் வந்தால் நடவடிக்கை எடுப்போம். தேர்தல் கமிஷனுக்கு ஏராள அதிகாரங்கள் இருக்கின்றன."

# "எனக்கு அதிகாரங்களைப் பயன்படுத்தும் மனஉறுதி இருக்கிறது!"

**தேர்தல் கமிஷனுக்குள்ள அதிகாரங்கள் என்னென்ன? தேர்தல் நெறிமுறைகளைக் கடைப்பிடிக்காத அரசியல் கட்சிகளைத் தேர்தல் கமிஷனால் என்ன செய்ய முடியும்? என்பது போன்ற கேள்விகளுக்குத் தலைமைத் தேர்தல் கமிஷனர் டி. என். சேஷன் பதிலளிக்கிறார். இதோ புதுதில்லியில் கல்கிக்காக அவர் அளித்த சிறப்புப் பேட்டி...**

**கேள்வி:** அரசியல் கட்சிகள் தேர்தல் சமயத்தில் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளைத் தேர்தல் கமிஷன் அறிவித்துள்ளது. அச்சிட்டு விநியோகித்தும் உள்ளது. அரசியல் கட்சிகள் இந்த நெறி முறைகளைப் பின்பற்றுகின்றனவா என்பதைத் தேர்தல் கமிஷன் எவ்வாறு கண்காணிக்க முடியும்?

தலைமைத் தேர்தல் கமிஷனர் டி.என். சேஷன்: அரசியல் கட்சிகள் தங்களுக்கிடையே மனமுவந்து செய்து கொள்ளும் தார்மீக ஒப்பந்தத்தின் அடிப்படையில்தான் இந்த நெறிமுறைகள் வகுக்கப்படுகின்றனவே தவிர, சட்டபூர்வமான அடிப்படையில் அல்ல. அதனால் இவைகளைச் சட்டப்படி அமுல்படுத்த முடியாது.

கேள்வி: அரசியல் கட்சிகள் இந்த நெறிமுறைகளை மீறினால், தேர்தல் கமிஷன் வேறு என்ன நடவடிக்கைதான் எடுக்க முடியும்?

சேஷன்: நமது அரசியல் சாசனத்தின் 324 வது பிரிவின் அடிப்படையில், தேர்தல் கமிஷன் நியமிக்கப்பட்டிருக்கிறது. எப்படிப்பட்டவர்கள் தேர்தலில் போட்டியிடலாம் என்பது போன்ற விதிகளை வழங்கும் சட்டங்கள் பல நமது அரசியல் சாசனத்தில் உள்ளன. இவை தவிர, பல பொதுவான சட்டங்களும் உள்ளன. வன்முறைகளில் இறங்குபவர்கள் மீது நடவடிக்கை எடுப்பதற்கு என்று தனியாகச் சட்டம் வகுக்க வேண்டியதில்லை. இருக்கிற சட்டங்களே போதும். உதாரணமாக, இப்பொழுது இருக்கும் பதிவுச் சட்டத்தின்படி (Registration Act), போஸ்டர்கள் அல்லது நோட்டீஸ்கள் வெளியிட்டால், அவை எந்த அச்சகத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன, வெளியிடுபவர் யார் என்பதெல்லாம் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். அப்படியில்லையென்றால், அவற்றைக் கைப்பற்றுவதற்கான அதிகாரம் அரசுக்கு உள்ளது. அதே போல் தகாத விஷயங்கள் — ஜாதி, மத வெறியை அல்லது மொழி வெறியைத் தூண்டும் அறிவிப்புகள், துண்டுப் பிரசுரங்களையும் அரசாங்கம் இந்தச் சட்டத்தின்

கீழ் கைப்பற்றலாம். இவை எல்லாவற்றையும் விட நேர்மையான முறையில் தேர்தல் நடப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பதற்குத் தேர்தல் கமிஷனுக்கு உள்ள அதிகாரங்கள் ஏராளமானவை. ஆனால் இந்த அதிகாரங்களைத் தேர்தல் கமிஷன், கடந்த காலங்களில் முழுமையாகப் பயன்படுத்தியதா என்பது வேறு விஷயம்.

கேள்வி: ஆளும் கட்சி, தொலைக்காட்சி, வானொலி போன்ற சாதனங்களைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்புகள் நிறையவே இருக்கின்றன. இதை உன்னிப்பாகக் கண்காணித்து, நடவடிக்கை எடுக்கத் தேர்தல் கமிஷனின் அமைப்பு இடமளிக்கிறதா?

சேஷன்: அதிகாரிகளை விடப் பத்திரிகைகளும் பொது ஜனங்களும்தான் எனக்கு இது போன்ற தகவல்களைக் கொடுக்க வேண்டும். மக்கள் புகார் கொடுத்தால், நாங்கள் விசாரிப்போம். இப்படிப்பட்ட புகார்கள் எலெக்ட்ரானிக் மீடியாவின் துஷ்பிரயோகமாக இருந்தாலும் சரி, அரசாங்க வசதிகளின் (தொலைபேசி, கார் போன்ற) துஷ்பிரயோகமாக இருந்தாலும் சரி அல்லது அரசாங்க அதிகாரிகளின் பதவி மாற்றங்களானாலும் சரி, நாங்கள் எங்கள் காதுகளையும், கண்களையும் திறந்து வைத்துக் கொண்டிருக்கிறோம். கடந்த காலத்தில் தேர்தல் கமிஷன் பல தவறுகளைக் கண்டு கொள்ளாமல் விட்டிருந்திருக்கலாம். ஆனால் நாங்கள் அப்படி விட்டுவிட மாட்டோம். யார் எந்தவித துஷ்பிரயோகம் செய்தாலும் எங்களுக்குள்ள வரம்பிற்குள் நிச்சயமாக நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்; அதற்கான தண்டனை வழங்கப்படும் என்பதை, உங்கள் பத்திரிகையின் மூலம் மக்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

கேள்வி: ஏதாவது ஒரு தலைவருக்கோ, கட்சிக்கோ அளவுக்கு அதிகமாகத் தொலைக்காட்சி முக்கியத்துவம் அளித்தால், தேர்தல் கமிஷன் அதில் தலையிடுமா?

சேஷன்: தலையிடுமா என்பதை விடத் தலையிட்டிருக்கிறீர்களா என்று கேளுங்கள்! இதற்குப் பதில் 'ஆமாம்' என்று நிச்சயமாகச் சொல்வேன். தகவல் ஒலிபரப்புத் துறை அமைச்சரகத்தை, ஏற்கெனவே வகுக்கப்பட்டுள்ள நெறிமுறைகளைப் பின்பற்றுமாறு கேட்டுக் கொண்டிருக்கிறோம். அமைச்சரகம் இந்த நெறிமுறைகளைப் பின்பற்றுகிறதா என்று கவனிக்கப்படும்; அமுல்படுத்தவும் படும். மறுபடியும் சொல்கிறேன் என்னுடைய கண்காணிப்புச் சாதனங்கள் என்பது நமது மக்கள்தான்; அரசாங்க அதிகாரிகளோ, தேர்தல் அதிகாரிகளோ அல்ல. தயவு செய்து உங்கள் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு அரசு மீடியாக்களைக் கவனித்துப் புகார் கொடுங்கள் என்று நான் நமது மக்களை — குறிப்பாக இளைஞர்களைக் கேட்டுக் கொள்கிறேன். அப்படிச் செய்தால் நாங்கள் குறையின்றிச் செயலாற்ற உதவியாய் இருக்கும்.

கேள்வி: பல மாநிலங்கள், அரசு அதிகாரிகளைப் பதவி மாற்றம் செய்துள்ளன. தேர்தல் கமிஷனால் அவற்றை ரத்து செய்ய முடியுமா?

சேஷன்: முடியும். அதற்காக நாங்கள் இஷ்டப்படி மாற்றி அமைக்க மாட்டோம். அதிகாரிகளின் பதவி மாற்றம் தேர்தல் நெறிமுறைகளின் ஓர் அங்கம் அல்ல. இது தேர்தல் கமிஷனரின் ஒரு வழிமுறை அல்லது உத்தரவு என்று சொல்லலாம். தேர்தல் அறிவிப்பு வந்த பிறகு அதிகாரிகளின் பதவி மாற்றம் கூடாது என்பது ஸ்டாண்டிங் இன்ஸ்ட்ரக்ஷன். தேர்தல் சம்பந்தப்படாத அதிகாரிகளின் மாற்றங்களைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. தேர்தலுடன் நேரடித் தொடர்புள்ள அதிகாரிகள் — அதாவது மாநிலங்களிலுள்ள தலைமைத் தேர்தல் அதிகாரிகள், அவர்கள் அலுவலர்கள், மாவட்ட ஆட்சியரின் அலுவலகத்தைச் சேர்ந்தவர்கள்,



''கம்ப்யூட்டர் மூலம் தொடர்ந்து தகவல் சேகரிக்கிறோம். எந்தெந்தப் பகுதிகள், என்னென்ன காரணங்களால் ஸென்ஸிடிவ் என்று அவ்வப்போது தெரிந்து கொள்ளலாம்.''

காவல் துறையினர் போன்றவர்களை, நான் அறிவித்த மார்ச் 25 ஆம் தேதிக்குப் பிறகு, எனது அனுமதியின்றிப் பதவி மாற்றம் செய்தால், நான் ரத்து செய்யலாம். ஆனால் மார்ச் 20லிருந்து 25 தேதிக்குள் பல பதவி மாற்றங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த மாற்றங்கள் வழக்கமான மாற்றங்களாகவோ அல்லது தக்க காரணங்களுக்காகவோ இல்லாமல் இருந்தால், அவற்றை ரத்து செய்து விடலாம். பீகார், திரிபுரா, ஹரியானா, ராஜஸ்தான், உத்திரப்



## அடுத்த இதழில்...

●● கிரெடிட் கார்ட்: வசதியா? வேதனையா?
— அலசல்

●● எந்த அணிக்கு வோட்டு? ஏன்?
— மாணவர் கட்டுரைகள்

●● சவாலாக அமைந்த சிசேரியன்
— ஒரு டாக்டரின் அனுபவம்

பிரதேசம், மத்திய பிரதேசம், ஆந்திரா, கர்நாடகா போன்ற மாநிலங்களிலிருந்து வழக்கத்திற்கு மாறாகப் பதவி மாற்றங்கள் செய்யப்பட்டிருப்பதாகப் புகார்கள் வந்துள்ளன. அதன்படி சம்பந்தப்பட்ட ஒவ்வொரு மாநிலத்தையும், விளக்கம் கேட்டிருக்கிறோம். தவறு நேர்ந்திருப்பதாகக் கண்டு பிடித்தால், என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறேன் என்று என்னை இப்பொழுது கேட்காதீர்கள். நான், என்னுடைய விசேஷ அதிகாரங்களை உபயோகிக்க விட்டு விடுங்கள்.

கேள்வி: இந்த இடத்தில் ஒரு கேள்வி... தேர்தல் கமிஷனுக்குப் போதுமான அதிகாரங்கள், சுதந்திரம் இருக்கிறது என்று நினைக்கிறீர்களா?

சேஷன்: உச்சநீதி மன்றம், தேர்தல் கமிஷனுக்கு ஏராளமான Judiciary and residuary அதிகாரங்களை வழங்கியிருக்கிறது. நேர்மையான விதத்தில் தேர்தல் நடத்தும் பொறுப்பை நிறைவேற்றுவதற்காக நான் இந்த அதிகாரங்களை நிச்சயமாகப் பிரயோகிப்பேன்.

கேள்வி: தேர்தல் வழிமுறைகளின் மாற்றங்கள் பற்றி ஆராய்ந்த குழு தமது சிபாரிசுகளைக் கடந்த ஆண்டு மே மாதமே சமர்ப்பித்தது. ஆனாலும் அந்த மசோதா இன்னமும் அமுலுக்கு வரவில்லை. அந்த மசோதா அமுலுக்கு வந்திருந்தால், ஒரு வேளை தேர்தல் கமிஷன் இன்னும் சில அதிகாரங்களைப் பெற்றிருக்கலாம் என்று கருதுகிறீர்களா?

சேஷன்: நமது நாட்டில், தேவையான சட்டங்கள் இல்லாததுதான் தக்க நடவடிக்கைகள் எடுப்பதற்குத் தடையாக உள்ளது என்று சொல்வது பல விஷயங்களில் சரியில்லை. கடந்த காலத்தில் சரியான நடவடிக்கைகள் எடுக்கப்படாததற்குச் சட்டமோ அதிகாரமோ இல்லை என்பதைக் காரணமாகச் சொல்ல முடியாது. அமுல் படுத்துவதற்கு வேண்டிய மன உறுதி அல்லது விருப்பம் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். எனக்குத் தேவையான அளவு மன உறுதியும் அதிகாரமும் இருக்கின்றன. நான் மக்களின் நலனுக்காக இவைகளைப் பிரயோகிக்கத் தயங்க மாட்டேன்.

கேள்வி: வாக்குச் சாவடிகளில் மின்னணு இயந்திரங்களை அறிமுகப் படுத்துவதன் மூலம், கள்ள வோட்டுகள் போடுவது போன்ற முறைகேடுகளைத் தவிர்க்கலாம் என்று சொல்லப்படுகிறதே! அப்படியிருந்தும் அந்த இயந்திரங்களை அறிமுகப்படுத்துவதில் ஏன் இந்தத் தயக்கம்?

சேஷன்: தயக்கம் ஒன்றும் இல்லை. சுமார் பத்துப் பதினோரு வருடங்களுக்கு முன்பு தேர்தல் கமிஷன், கேரளாவில் பறவூரில் நடந்த தேர்தலில், எலக்ட்ரானிக் இயந்திரங்களை அறிமுகப்படுத்தியது. அதைத் தொடர்ந்து இன்னும் ஒருசில தேர்தல்களில் அந்த இயந்திரங்கள் உபயோகப்படுத்தப்பட்டன. ஆனால், யாரோ ஒருவர் கோர்ட்டில் வழக்குத் தொடரவே, நீதிமன்றம், தேர்தல்களில் இயந்திரங்களை உபயோகிக்கத் தேர்தல் சட்டத்தில் அனுமதி கிடையாது என்று தீர்ப்பு வழங்கி விட்டது. அதற்குப் பிறகு 1988ல் சட்டத் திருத்தமொன்று கொண்டு வந்த பிறகு தேர்தல்களில் இயந்திரங்களை உபயோகிக்க அனுமதி கிடைத்தது. நமது நாட்டில் நாடாளுமன்றத் தேர்தலும், சட்ட மன்றத் தேர்தல்களும் ஒரே சமயத்தில் நடைபெற்றால், சுமார் பன்னிரண்டு லட்சம் இயந்திரங்கள் தேவைப்படலாம். 1989 ஆம் ஆண்டு, ஒன்றரை லட்சம் இயந்திரங்கள் வரையில் வாங்குவதாக முடிவு செய்து. அரசாங்கம் ஹைதராபாத்திலுள்ள ECL பெங்களூரிலுள்ள BEL ஆகிய இரண்டு பொதுத் துறை நிறுவனங்களிடமும் ஆர்டர் கொடுத்தது. ஒரு இயந்திரத்தின் விலை ஐயாயிரம் ரூபாய். ஆனால் 1989 நவம்பர் மாதம் நடந்த நாடாளுமன்றத் தேர்தல் சமயத்தில், இந்த இயந்திரங்கள் கைக்குக் கிடைக்கவில்லை. 1990 ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில்தான் இந்த இயந்திரங்கள் கிடைத்தன. அடுத்த மாதமே சில இடங்களில் சட்டமன்றத் தேர்தல்கள் நடைபெற்றன. ஆனால் இந்த இயந்திரங்கள் மூலம், தில்லுமுல்லு — அதாவது வேட்

# உவகை ஊட்டும் உற்சாக ஊற்று!



## வின்சென்ட்ஸ்

* இன்சுவை குளிர் பானங்கள்:

ஆரஞ்ச் ☐ லெமன் ☐ ஜிஞ்சர்

பன்னீர் சோடா ☐ காக்டெயில் ☐ சோடா

*: CONTAINS NO FRUIT JUICE/PULP

* பல்சுவை பழரச பானங்கள்:

ஆரஞ்ச் ☐ மேங்கோ ☐ கிரேப் ☐ பைனப்பிள்

* CONTAINS PERMITTED COLOUR AND ADDED FLAVOUR

ஜிலு ஜிலு அறிமுகம் : கிறுகிறு கோலா!

MCS/VIN/606

பாளர் தனக்குச் சாதகமாக மாற்றி அமைத்துத் தில்லுமுல்லு ஏதாவது செய்ய வாய்ப்பு இருக்கிறதோ என்ற சந்தேகத்தினால் அவற்றை உபயோகிக்கவில்லை. கிட்டத்தட்ட இதே சமயத்தில் அரசாங்கம் தேர்தல் வழிமுறைகளின் மாற்றங்கள் பற்றி யோசனை தெரிவிக்க கமிட்டி ஒன்றை நியமித்தது. எலெக்ட்ரானிக் இயந்திரங்களைத் தேர்தல்களில் உபயோகிப்பது பற்றியும் ஆலோசனை வழங்குமாறு அந்தக் கமிட்டியிடம் கேட்டுக் கொள்ளப்பட்டது. இந்தக் கமிட்டியின் சார்பில் நியமிக்கப்பட்ட டெக்னிகல் கமிட்டி, எலெக்ட்ரானிக் இயந்திரங்களின் மூலம் எந்தவிதத்திலும் தில்லுமுல்லு செய்ய முடியாது என்று சொல்லி, இந்த இயந்திரங்களைத் தேர்தல்களில் உபயோகிக்கலாம் என்று சிபாரிசு செய்தது. ஆனால் இது சம்பந்தமாக முடிவெடுப்பதற்குள், கடந்த நவம்பர் மாதத்தில் அரசாங்கம் மாறி விட்டது. அதனால் தான் இதுவரை அது தொடர்பாகத் தீர்மானம் ஒன்றும் எடுக்கப்படவில்லை. மேலும் இயந்திரங்களை உபயோகிக்கத் தேர்தல் ஊழியர்களுக்கும், பொது மக்களுக்கும் பயிற்சி அளிக்க வேண்டும். அதற்கு வேண்டிய நேரம் இந்தத் தேர்தலில் இல்லை. இருப்பினும், கூடிய விரைவில் அந்த இயந்திரங்களை உபயோகிக்க ஆரம்பிப்போம்.

கேள்வி: கடந்த தேர்தல்களின் பொழுது அமேதி, மேஹம் போன்ற தொகுதிகளில் ஏகப்பட்ட வன்முறையும் அராஜகமும் நடந்தன. இந்த முறை இப்படிப்பட்ட வன்முறைகளைத் தவிர்க்க முன்னெச்சரிக்கையாக ஏதாவது நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றனவா?

சேஷன்: நிச்சயமாக. Sensitive பகுதிகளை உன்னிப்பாகக் கவனித்து வருகிறோம்.

கேள்வி: 'சென்ஸிடிவ்' பகுதிகள் என்று எந்த அடிப்படையில் தீர்மானம் செய்வீர்கள்?

சேஷன்: எந்தெந்த இடங்களில் ஒழுங்கான, நேர்மையான முறையில் தேர்தல் நடப்பதற்கு இடையூறு ஏற்பட வாய்ப்பு இருக்கின்றதோ... ஜாதி, மொழி, மதம் காரணமாக வகுப்புக் கலவரங்கள் உண்டாக வாய்ப்புக்கள் உள்ளனவோ அல்லது அரசியல் கட்சிகளுக்கிடையே ஏதாவது ஒரு தொகுதியில் வரம்பு மீறிப் போட்டிகள் அதிகரித்தாலோ அந்த இடங்களையெல்லாம் 'சென்ஸிடிவ்' பகுதிகள் என்று கணக்கிடலாம். அந்த இடங்களில் கூடுதலாகக் கவனிப்பு, ஆள்பலம் எல்லாம் அளிக்கப்படும். இப்படிப்பட்ட தொகுதிகளைப் பற்றி நாங்கள் நவீன கம்ப்யூட்டர்களின் மூலம் தொடர்ந்து தகவல் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். கூடிய சீக்கிரத்திலேயே, என் அறையில் உள்ள வரைபடத்தில், பட்டனை அழுத்துவதன் மூலம், எந்தெந்தப் பகுதிகள் என்னென்ன காரணங்களினால் 'சென்ஸிடிவ்' என்று, நிலைமையை அவ்வப்பொழுது தெரிந்து கொள்ளலாம். தேர்தல் சமயத்தில் ஏதாவது தொகுதியில் நிலைமை அத்துமீறிப் போனால், அங்கு தேர்தலை ஒத்தி வைக்கவும் தயங்க மாட்டோம்.

பேட்டி: **ரமாமணி சுந்தர்**

படங்கள்: **செந்தில் ஆர். கணேஷ்**

---



**''எங்க மானேஜர், ஒரு நாளைக்கு 'ஒரு' முறைதான் ரவுண்ட்ஸ் வருவார்.**

**''எப்போ?''**

**''லஞ்சின் போது, எல்லோரிடமும் வந்து, 'டேஸ்ட்' பார்ப்பார்.''**

**— ஆர். வசந்தகுமார்.**

**''புதுசா ரெண்டு லேடி-ஸ்டாஃப் வந்தாலும் வந்தாங்க, ஆபீஸ்ல எல்லாரோட வேலையும் கெட்டுப் போச்சு.''**

**''ஏன் அப்படி...?''**

**''ரெண்டு பேரும் வளவளன்னு பேசிக்கிட்டிருந்தா, மத்தவங்க எப்படி நிம்மதியாத் தூங்க முடியும் சொல்லுங்க?''**

**— சீர்காழி. வி. ரேவதி.**





# கோபுர வாசலிலே

"கனம் கோர்ட்டார் அவர்களே, உயர்ரகப் பட்டுப்புடைவையை எடுத்து விசிறிக் காட்டின மாதிரி எத்தனை ரம்மிய மான காமிரா? இளையராஜாவின் இசை, கார்த்திக், ஜனகராஜின் நடிப்பு... என அடுக்கிக் கொண்டே போகலாமே?"

எதிரணி வக்கீல் நமுட்டுச் சிரிப்புடன் விவாதிக்கிறார்: "புடைவையில் ஜரிகை அழகுதான். வர்ணம் இருக்கிறது. பின்னலும் இருக்கிறது. ஆனால் அடிப்படை விஷயம், பட்டு, கதை! அது அத்தனை சிறப்பாக இல்லையே?"

"கார்த்திக் வழக்கமான கல்லூரி மாணவர். சக மாணவி சுசித்ராவை விரும்பி, தைரியமாக அணுகி, சுறுசுறுப்பாகத் துரத்தி, வம்பிழுத்து, ஜெயித்து, கல்யாணத் தருணத்து விபத்தில்... சுசித்ராவின் மரணம். மனம் ஒன்றிவிடும் காட்சிகளாயிற்றே!"

"அப்படியென்றால் அடுத்த காதலைக் கதாநாயகன் சொடக்குப் போடுகிற கதியில் துவக்கியது சரியா? மேலும் ஒரே மாதிரி பாத்திரங்கள் அலுப்பின் விளிம்புக்கு அழைத்துப் போகின்றன. கார்த்திக் கப்தார்!"

"நிகழ்கால கார்த்திக் – பானுப்ரியா இருவரையும் நெருங்கவிடாமல் காதலிக்க வைப்பது புது உத்தி இல்லையா?"

"ஆனால் அது அளவுக்கு மீறி இழுவையாகி விடுகிறதே? பானுப்ரியாவுக்கு நடிப்புக்கு வேலை தராமல் வேறு விதமாய் எக்ஸ்ப்ளாய்ட் செய்திருப்பது; முதல்வர் நாகேஷை வெறுப்பதா, ரசிப்பதா? என்று புரியாமல் தவிர்க்க நேர்வது; எல்லாவற்றையும் விட, அத்தனை கெடுதல் செய்த அறை நண்பர்களைத் துப்பாக்கியால் மிரட்டுவது சரி: அவர்களை அவசியமே இல்லாமல் சுலபமாக மன்னித்து, வலிய வரவேற்பது... ஊஹும்...!"

பெருமூச்சு.

பார்வையாளர்கள்: "தீர்ப்பு ப்ளீஸ்."

"யானைக்கும் அடி சறுக்கும் என்பது பழமொழி. இங்கே பிரியதர்ஷன், இளையராஜா, ஸ்ரீராம், கார்த்திக், பானுப்ரியா, ஜனகராஜ் என்று திறமைசாலிகளின் அணிவகுப்பு இருந்தும்... யானைக் கூட்டத்திற்கே அடி சறுக்கி இருக்கிறது!"

— சுந்தர்ஜி

2 நல்ல வண்ணம் வாழலாம்!

# எது வீரம்?

சில பேருக்கு யாரைக் கண்டாலும், எதற்கெடுத்தாலும் பயம். சிலருக்கு மேலதிகாரிகளிடம் பயம். சில மேலதிகாரிகளுக்குத் தங்கள் ப்யூனிடம் பயம்! மாமூல் அவர் மூலம் வாங்கினால் பயம் இருக்காதா என்ன?

நமது பெண்கள் வீராங்கனைகள். புலியையே முறத்தால் விரட்டினாள் தமிழச்சி ஒருத்தி. அந்தத் தமிழ்ச் சாதிப் பெண்கள் இன்று கரப்பான்பூச்சியைக் கண்டால் கதறுகிறார்கள். அது சரி! அந்தக் கரப்பான் பூச்சிக்குப் பயப்படும் மனைவிக்குப் பயப்படும் கணவன் எந்த ஜந்து என்றே தெரியவில்லை.

எனக்கும் பயம் உண்டு. சொற்பொழிவு தொடங்கியதும் யாராவது பாதியில் எழுந்து விடுவார்களோ என்ற பயம். சொற்பொழிவு கேட்பவர்களுக்கும் ஒரு பயம் இருக்கும். எங்கே இவர் நிறுத்தவே மாட்டாரோ என்று!

அச்சம்... மனிதகுல வளர்ச்சியின் நச்சு நோய். பக்தி... அதை எதிர்க்கும் கிருமி நாசினி. பயம் நோய். பக்தி கிருமிநாசினி. பயம் — இதன் எதிர்ப்பதம் அபயம். எல்லாக் கடவுள் கைகளும் அபயம் என்ற முத்திரை காட்டுவதால் பயத்தின் எதிரி கடவுள்... மதம்... வழிபாடு.

அச்சமின்மையே அமரத்வம், இறை நிலை. இது என் தெளிவான அபிப்ராயம். எதற்கும் அஞ்சாத பலரும் அஞ்சும் மரணத்திற்கும் ஞானி அஞ்சுவதில்லை. ''காலா என் காலருகே வாடா'' என்பது மகாகவியின் அறைகூவல்.

ஹிந்து தர்மத்தில் எல்லாக் கடவுளும் பாம்புடன் காட்சியளிப்பது ஏன்? என்ன பொருள்? பாம்பு என்பது பயமுறுத்தலின் அடையாளம்.

பாம்பென்றால் படையே நடுங்கும் என்பது பழமொழி. ஆம், அச்சத்தின் அடையாளம் அரவு. தெய்வங்களிடம் அது முடக்கி வைக்கப் பட்டிருப்பதால் அச்சமின்மை தெய்வீகம் என்று விளக்கப்படுகிறது. அச்சமின்மை அமரத்வம். அது வாழ்வின் இலட்சியம்.

கிரேக்க அலெக்ஸாண்டரையும், சமண மத ஸ்தாபகரையும் மகாவீரர் என்றே அழைக்கிறோம். யார் உண்மையில் மகாவீரர்? புத்திசாலிப் பையனிடம் இரண்டு படத்தையும் காட்டிக் கேட்டால் நிர்வாணமாக நிற்கும் மகாவீரரைத்தான் காட்டுவான். ஏன்?

இரும்புத் தொப்பி, ஈட்டி, கேடயம் சகிதமாக நம் சரித்திர புத்தகத்தில் அலெக்ஸாண்டர் அச்சாகி இருப்பார். அவரது பாதுகாப்பு உடைகள் பயத்தின் வெளிப்பாடு. ஆயுதங்களோ அமைதி இன்மையின் அடையாளம்.

எதிர்க்க எவனுமே இல்லை என்ற மனோநிலையில் அச்சமின்றி ஆயுதமின்றி நிற்கும் சமணத் தலைவர்தான் மகாவீரர். சும்மாவா சொன்னாள் அவ்வை...

''புலனைந்தும் வென்றான்தான் வீரமே வீரம்.''

திருவதிகை வீரட்டானம். திருக்கோயில் தெருப் பகுதியில் புற்களைச் செதுக்குகிறார் ஒரு பெரியவர். புதிய கோயில் கட்டுவதை விட பழைய கோயிலை இடிய விடாமல் பாதுகாப்பது பெரிய பணி என்பது அவர் கொள்கை போலும். யார் அவர்? 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற தாரக மந்திரத்தின் தந்தை அவர். அவர்தான் அப்பர்.

மனம் மாறி, அதனால் மதம் மாறி இருந்த அவரைப் பழிவாங்க பல்லவப் பேரரசு சல்லடை போட்டுத் தேடியது. அரசரின் ஏவலர்கள் (காவலர்கள் அல்லர்) உரத்த குரலில் (அரசாங்கச் சோறு அல்லவா?)

''ம்... புறப்படு.. கோமகன் அழைக்கிறார். குடிமகனே புறப்படு,'' என்றனர்.

''நான் எந்த நாட்டுக்கும் குடிமகன் இல்லை. எனக்கு எவனும் கோமகனும் இல்லை.'' மறுக்கிறார் பெரியவர்.

''என்ன திமிர்... அரசாணை மறுத்தால் எமனுக்கு உணவாவாய்.. நரகம் செல்வாய்.''

''நமன் என்னை நெருங்க மாட்டான். நரகம் புக மாட்டேன்'' — இது நாவுக்கரசின் நல்லுரை. இதோ பாடல்.

''நாமார்க்கும் குடி அல்லோம் நமனை
அஞ்சோம்
நரகத்தில் இடர்ப் படோம் நடலை
இல்லோம்''

இந்தத் திருநாவுக்கரசர் தேவாரம் சைவ உலகின் வீராஸனம். அபயம், நிர்ப்பயம் இவை ஞான வீட்டின் வாசற் கதவுகள்!

''பூமியில் எவர்க்கும் இனி அடிமை
செய்யோம்
பரிபூரணனுக்கே அடிமை செய்து
வாழ்வோம்''

என்ற பாரதியின் ஆரவாரம் தமிழில் இருந்தே தமிழுக்கு மொழிபெயர்க்கப்பட்ட தேவாரம்.

அரசியல் விடுதலையும் ஆன்மிக விடுதலையும் பின்னிய இந்திய விடுதலை



உணர்வு ஏழாம் நூற்றாண்டின் ஞானத் தமிழன், பக்தி வேளாளன் திருநாவுக்கரசு கொடுத்த தெய்வப் பரிசு. மகாத்மா காந்தி என்பது நாவுக்கரசரின் புனை பெயர்களில் ஒன்று என்ற கற்பனையில் நியாயமான சுகம் இருக்கிறது.

**அ**ரசும் அரசும் மோதின. பல்லவ அரசும் சொல் தவ அரசும் மோதின. அரசு எந்திரங்கள் தனிமனிதனை நசுக்க முடுக்கி விடப்பட்டன. திருநாவுக்கரசு சுண்ணாம்புக் காளவாயில் சிறை வைக்கப்பட்டார்.

ஆனால் அந்த வெப்ப விஷம் அவருக்கு ''மாசில் வீணை, மாலை மதியம், வீசு தென்றல், வீங்கிளவேனில், மூசுவண்டறை பொய்கை'' ஆனது. ஏன்? அவரது மனம் ஈசன் எந்தை இணையடி நிழலில் இருந்தது.

கடுவிஷம் அழிக்கவில்லை. கல்லைக் கட்டிக் கடலில் பாய்ச்சியும் கலங்கவில்லை அந்த மகான். குன்று போல் நின்ற ஆனை ஒன்று காலை உயர்த்திக் கொல்ல வந்த போதும் ''அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்ச வருவதும் இல்லை'' என்று உதடுகள் உறுதிகூறி உச்சரித்தன. ''மலையே வந்து வீழினும் மனிதர்காள் கலங்காதிர்'' என்ற அவர் ஞானத் துணிவு மனிதகுல மனநோய்க்கு மாமருந்து. ''ஈர அன்பினர் யாதும் குறைவிலர் வீரம்'' என்ற சேக்கிழாரின் வரிகள் இவருக்கே பொருந்தும்.

வீரம் என்பது ஆயுதங்களில் இல்லை. மனிதனின் மனத்தில் இருக்கிறது. ஒரு உதாரணம் சொல்லுகிறேன். இருபது தோள்கள்.. இடுப்பெல்லாம் ஆயுதங்கள்... பத்துத் தலைகள்.. பகர முடியாத படை பலங்கள்... இலங்கை ஏகாதிபத்தியம் கொண்ட இரும்பு அரக்கன் இராவணன் எதிரில் நிற்கிறான்.

**சுகிசிவம்**

மெலிந்த உடல்... நலிந்த நிலை.. கண்ணீரால் ஆடை நனைந்து வெப்பப் பெருமூச்சால் காயும் இழிந்த கவிதையாக இருக்கும் சீதை அமர்ந்திருக்கிறாள்.

இவர்களில் யார் வீரர்? அந்த மாமிச மலையை, காமுகப் பாறையை 'ஏ துரும்பே' என்று சீதை அழைக்கிறாள் என்றால் அதுவல்லவா வீரம்... இதோ இன்னொன்று.

பாராளுமன்றம், சட்டம், போலீஸ், ராணுவம், வைஸ்ராய், நீதிமன்றம் என்று பத்துத் தலைகளுடன் இங்கிலாந்து ஏகாதிபத்தியம் இராவணனாகக் கொக்கரித்த போது நலிந்த நிலையில் இரண்டாவது சீதையாக இருந்து புதிய இராமாயணம் படைத்தார் காந்தியடிகள்... அதுவல்லவா வீரம்.

ஆயுதங்களில் வீரமிருப்பதாக யாரோ உளறி இருக்கலாம். கீழே போடுங்கள் நண்பர்களே! அஞ்சாமை நெஞ்சின் சரக்கு! எல்லா ஆயுதங்களையும் இழந்த பின்னும் நம்பிக்கையை இழக்காத அபிமன்யுவின் வீரம் இந்திய இளைஞனின் இலட்சியமாக இருக்கட்டும். அட்டைக் கத்தி செலுலாய்ட் வீரர்களுக்குக் கொடி கட்டுவதில் இளைஞர்களே நேரத்தை வீணாக்க வேண்டாம்.

இராமாயணத்தைப் பலர் மோட்ச காவியம் என்பார்கள். என் பார்வை வேறு. அது தன்னம்பிக்கைப் பூங்கா. எப்படி? எதை இழந்தாலும் தன்னம்பிக்கையை இழக்காதே என்பது இராமாயணத்தின் ஒரு கோணம்.

பொது வாழ்வில் பதவி போனால் மரியாதை இல்லை.

தனி வாழ்வில் மனைவி போனால் மானமே இல்லை. இரண்டையும் இழந்து, தன் உறுதியால் இரண்டையும் தன் காலில் விழ வைத்த தன்னம்பிக்கைத் தலைவன் இராமன். இந்தக் கோணத்திலும் இராமாயணம் படிக்கலாம். தவறில்லை...

(இன்னும் சொல்லுவேன்)



தான். "அப்படிப் போடும்படி என்னைக் கேட்டுத்தான் பாலு எழுதியிருக்கான். அதே யோசனை உனக்கும் எப்படி வந்தது?"

"இந்தச் சந்தர்ப்பத்தில் வேறென்ன யோசனை வர முடியும்? லலிதாவுக்கு நாதியில்லையா என்ன? பெத்தவா இல்லாட்டாலும் அண்ணனும் மன்னியும் இருக்கோமில்ல? கொஞ்ச காலம் நம்ம கூட வச்சுக்க ஆசைப்படறோம்னு சொல்லி அவளை அனுப்பச் சொல்லுங்கோ."

**வீ**டு கலகலப்பாயிருந்தது. காவேரியும் ஸ்ரீதரும் தத்தம் அலுவலகம் சென்ற பின், லலிதா பகலெல்லாம் ஓய்வெடுப்பாள், புத்தகம் படிப்பாள், களைப்பாயிருந்தால் தூங்குவாள்.

அவர்களுடைய ஏழு வயது மகன் பரத் 'அத்தை அத்தை' என்று ஒட்டுதலாய் இருந்தான். அவனுக்கும் அவளிடம் உயிர். மாலையில் எல்லோரும் ஒன்றாக அருகிலுள்ள பூங்காவுக்குக் காற்றாடப் போய் வருவார்கள். ஞாயிற்றுக் கிழமைகளில் சினிமா, கடற்கரை என்று போவார்கள்.

இரவு நேரங்களில் மனம் போனபடி, இறுக்கமின்றி, சகோதரனிடமும் அவன் மனைவியிடமும் லலிதா பேசிக் கொண்டிருப்பாள். அதுவும் காவேரியும் அவளும்

# இங்கே எல்லோருக்கும் இடமுண்டு

"**கா**வேரி!"

"ம்?"

"பாலு லெட்டர் போட்டிருக்கான்."

"என்ன விஷயம்? லலிதா சௌக்கியந்தானே?"

"ம், ம். அவளுக்கு உடம்பெல்லாம் தேவலையாம். ஆனா என்ன இருந்தாலும் டி.பி. வந்த 'உடம்பில்லையா? மருந்து, ஆகாரங்களைத் தவிர இன்னும் கொஞ்ச காலம் நல்ல ஓய்வு வேணும். ஆனா அவன் அம்மா அதுக்குள்ளேயே அவளைச் சமைக்கிறது, பம்ப் அடிக்கிறது அப்படின்னு எல்லா வேலையும் செய்யச் சொல்றாளாம். இவன் தடுக்கப் போனா, பெண்டாட்டிதாசன்னு ஏசறாளாம். வீட்டில் தகராறு வேணாம்னு லலிதா வேலையெல்லாம் செய்யறாளாம். அதனால..."

"பேசாம அவளை இங்கே ஒரு மூணு மாசத்துக்கு அனுப்பி வைக்கும்படி அவ மாமனாருக்கு லெட்டர் போடுங்கோ."

ஸ்ரீதர் மனைவியை வியப்புடன் பார்த்

இரவில் வெகு நேரம் வரை சின்னக் குரலில் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டுமிருக்கையில் ஸ்ரீதர் "அடடா, போதுமே பேச்சு! ரெண்டு பெண்கள் சேர்ந்தாலே பேச்சு, பேச்சு, பேச்சுத்தானா? மீதியை நாளைக்கு வச்சுண்டு இப்போ தூங்குங்கோ சொல்றேன்!" என்று வேடிக்கையாய் அதட்ட, "ஏண்ணா, பொறாமையாயிருக்கா?" என்று லலிதா உல்லாசமாய்ப் பதிலளிப்பாள்.

இங்கு வந்தபின் அவளிடம் ஏற்பட்டிருந்த உல்லாசம் இதற்கு முந்தைய அவளது சூழ்நிலையின் இறுக்கத்தை உணர்த்தியது.

வாரத்துக்கு ஒருமுறை கணவனுக்குக் கடிதம் எழுதிய அவள் விரல்களில் வாரத்துக்கு வாரம் செழுமை கூடி வருவதாய்த் தோன்றியதில் ஸ்ரீதருக்கும் காவேரிக்கும் இதழோரங்கள் மலர்ந்தன.

"**ஸ்ரீ**தர்!"

"ம்?"

"அப்பா லெட்டர் போட்டிருக்கார்."

''என்ன விஷயம்? ஊரில் எல்லாரும் செளக்கியந்தானே?''

''அதான் இல்லே. அம்மா! கொஞ்ச நாளாய் வயித்தில ஏதோ வலின்னு சொல்லிண்டிருந்தாளில்லையா? திடீர்னு ஜாஸ்தியாப் போய் டாக்டர்கிட்டே அழைச்சுண்டு போனாராம் அப்பா. டாக்டர் பார்த்து துட்டுக் குடல்ல இருக்கிற ஏதோ கோளாறுக்காக ஆபரேஷன் செய்யணும்னாராம். மேஜர் ஆபரேஷன்.''

சொல்லும்போதே கண்கள் கலங்கின.

''பயப்படாதே காவேரி. கடவுள் அருளால எல்லாம் சரியாப் போகும். ஊருக்குப் போய் அம்மாவைப் பார்க்கணுமா உனக்கு?''

''ஆபரேஷன் போது போனாப் போதும். அது அடுத்த மாசம்தான். அப்பா இப்போ எழுதியிருக்கறது...''

''சொல்லு.''

''கிட்டத்தட்ட பத்தாயிரம் ரூபாய் ஆகுமாம் ஆபரேஷனுக்கு. அவர் எப்படியோ ஆறாயிரம் வரை புரட்டிட்டாராம். நீங்க... நீங்க ஒரு நாலாயிரம் கடனாத்

**ஆர். சூடாமணி**

தந்தா உபகாரமாயிருக்கும்னு கேட்டு எழுதியிருக்கார்.''

ஸ்ரீதர் மௌனமாய் நின்றான். அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''நாம ரெண்டு பேரும் சம்பாதிக்கறோமில்லையா? அதனால முடியும்னு நினைச்சுக் கேக்கறார்...''

''அதுக்கில்லே. தன் பிள்ளையாயிருந்தால் கடனாக் கேப்பாரா? 'உங்கம்மாவுக்காகக் கொடுடா'ன்னு உரிமையோட கேக்க மாட்டார்? என்னை அன்னியனாய்த்தானே நினைச்சுட்டார் கடைசில!''

காவேரியின் தகப்பனார் சங்கரன் வந்திருந்தார். சென்னையில் இருந்த சில சில்லறை அலுவல்களை முடித்துக் கொண்டு, மாப்பிள்ளையிடமிருந்து பணமும் வாங்கிச் செல்ல உத்தேசம்.

இந்த வீட்டில் லலிதாவைப் பார்த்த போது, முதலில் அவருக்குத் திக்கென்றது. ஸ்ரீதரின் தங்கையும் இந்தச் சமயம் வந்திருக்கிறாளா? தன்னை இங்கே பார்த்தால் — அதுவும் தான் வந்துள்ள நோக்கத்தை அறிந்தால் — என்ன நினைப்பாள்? அண்ணா தன் சம்பாத்தியத்தையெல்லாம் வேட்டகத்துக்கு அள்ளி விட்டு விடுகிறான் என்றா? மன்னி அவனை அதற்குத் தூண்டுகிறாள் என்றா?

ஆனால் சீக்கிரமே அந்தப் பெண் கபடமற்றவள் என்று புரிந்தது. அவள் வந்திருந்த காரணத்தைக் காவேரி சொன்ன போது, அந்தத் தாய் தந்தையற்ற பெண்ணை இத்தனை பரிவாக அரவணைக்கும் தம் மகளை எண்ணிப் பெருமையாகவும் இருந்தது.

இப்போது நான்கு நாட்களாய்ப் பகலிலும் அரட்டையடிக்க லலிதாவுக்கு ஆள் கிடைத்து விட்டது.

''சும்மா கண்ணைக் கவிச்சுப் படிச்சுண்டே இருக்கியேம்மா! கொஞ்ச நேரம் படுத்துத் தூங்கு,'' என்று சங்கரன் ஒரு பிற்பகலில் லலிதாவிடம் கூறினார், அவள் வெகு நேரம் ஒரு புத்தகத்தில் ஆழ்ந்திருப்பதைக் கண்டு.

''தூக்கம் வரலே மாமா. அதுவும் தவிர, நான் இங்கே இருக்கற போது படிச்சாத்தான் உண்டு. ஊரில் எனக்கு இதுக்கெல்லாம் நேரமேது!'' — லலிதா புத்தகத்தை அடையாளமிட்டு மூடி மேஜை மீது வைத்தாள். ''உக்காருங்களேன் மாமா... எத்தனை அருமையான புஸ்தகம்! நீங்க ஆழ்ந்த விஷயங்களிலெல்லாம் ஈடுபாடு உள்ளவராச்சே, ஒருவேளை இதை ஏற்கெனவே படிச்சிருக்கலாம்.''

சங்கரன் புத்தகத்தை எடுத்துப் பார்த்தார். 'கௌதம புத்தர் வாழ்க்கையும் தத்துவமும்.' ஆசிரியர் பெயரையும் பார்த்தார். ''படிச்சிருக்கேன். ரொம்ப நல்ல புஸ்தகம்தான். நீ இவ்வளவு சீரியஸ் எழுத்தெல்லாம் கூடப் படிப்பியா என்ன?''

''படிக்கப் பிடிக்கும். அண்ணா இந்தத் தடவை லைப்ரெரியிலேர்ந்து கொண்டு வந்த புஸ்தகங்கள்ல இதுவும் ஒண்ணு. எனக்கு ஒரு சந்தேகம் மாமா.''

''என்னம்மா?''

''புத்தர் கொள்கைகள் சிறப்பாயிருக்கு. கான்வென்ட்டில் படிச்சதால கிறித்துவக் கொள்கைகள் எனக்கு ஓரளவு தெரியும். நம் இந்து மதத் தத்துவத்தைப் பத்தியும் கொஞ்சம் படிச்சிருக்கேன். இதில் தனி மனித முக்தியைத்தான் வலியுறுத்திச் சொல்லியிருக்கே தவிர, அந்த மதங்களிலெல்லாம் சொல்லியிருக்கிற அளவு பரோபகாரத்தைச் சொல்லலே, இல்லையா?''

சங்கரன் லேசாய்ச் சிரித்தார். ''மேலோட்டமாய்ப் பார்க்கற போது அப்படித்தான் தோணும். ஆனா அது முழு உண்மையில்லை என்கிறது இந்து தர்மத்தில் விதிச்சிருக்கிற நாலு ஆசிரமங்களைக் கவனிச்சுப் பார்த்தா தெரியும்.''

''அந்த ஆசிரமங்கள் கூட மனுஷனுடைய சொந்த மேன்மைக்காகத்தான் இருக்கு? அதில் பரோபகாரம் எங்கே வந்தது?''

''மூணு ஆசிரமங்கள்ல நீ சொல்றது சரிதான் லலிதா. பிரமசரியத்தில் மனுஷன் கல்வி மூலமாய் வாழ்க்கையில் நுழையறான். வானப்ரஸ்தத்தில் வாழ்க்கையிலேர்ந்து ஒதுங்கறான். சன்னியாசத்தில் தன் முக்தியை நாடிப் போறான். ஆனா, கிருகஸ்தாசிரமம் என்கிற இல்லற நிலையில், நிச்சயம் வாழ்க்கையோடு கலந்துதானே இருக்கான்? மனுஷன் பிறருக்குச் செய்ய வேண்டியதையெல்லாம் அந்த ஆசிரமத்தில் சொல்லியிருக்கே! மற்ற மனிதர்களுக்கு மட்டுமில்லே, பிராணி வகைகளுக்கு முதற்கொண்டு அன்பு காட்டணும்னு சொல்லியிருக்கு. எறும்புக்குக் கூட உணவளிக்கக் கோலம் போடணும்னு சொல்ற அளவுக்குப் பரோபகாரத்தை வலியுறுத்தியில்லையா?''

லலிதா சிறிது நேரம் மௌனமாயிருந்து பிறகு சொன்னாள்: ''ம்... நீங்க சொல்றதிலும் விஷயமிருக்கு.''

''பேசிண்டே இருந்துட்டேனேம்மா! நான் எழுந்து போறேன், நீ கொஞ்ச நாழி படுத்து ஓய்வெடுத்துக்கோ.''

''இங்கே நான் ஓய்வெடுக்கிறதைத் தவிர வேறென்ன மாமா செய்யறேன்? காவேரி என்னைச் சமையலறைக்குள் நுழையக் கூட விடறதில்லை!'' என்று லலிதா சிரித்தாள்.

''நியாயந்தானே! நீ ரெஸ்டுக்குன்னு வந்துட்டு அப்புறம் இங்கேயும் வேலை செஞ்சால் என்ன அர்த்தம்?''

லலிதாவின் கண்கள் யோசனையுற்றன.

''வேலைங்கறது எவ்வளவு செய்யறோம்கிறது முக்கியமில்லை மாமா, எந்த மனநிலையில் செய்யறோம்னுதான் பார்க்கணும்னு எனக்குத் தோணறது. பிரியமில்லாத மாமியார் வேலை வாங்கற போது, அது தண்டனை. அன்பு நிறைஞ்ச சூழ்நிலையில் வேலை செஞ்சா அது பகிர்தல்.''

சங்கரன் எழுந்து சென்ற பிறகு லலிதா படுக்கையில் சாய்ந்து கொண்டே எண்ணமிட்டாள். அன்பு நிறைந்த சூழ்நிலைதான். என்ன சந்தேகம்? சங்கரன் ஊரிலிருந்து வருவதற்கு முன் அவள் காவேரியிடம், 'உங்கப்பா வந்தால் இங்கேதான் தங்குவார், இல்லையா காவேரி? நானும் இருந்தா இட நெருக்கடியாயிருக்குமே? நான் வேணும்னா இப்பவே ஊருக்குக் கிளம்பிப் போயிடட்டுமா? என் உடம்பும் நன்னாத் தேறிடுத்து' என்ற போது காவேரி சொன்ன பதிலை மறக்க முடியுமா?

'ரொம்ப அழகுதான் லலி! எங்கப்பா வந்தால் அதுக்காக நீ ஏன் போகணும்? இங்கே எல்லாருக்கும் இடமிருக்கு. கவலைப்படாதே. நீ இங்கே ரெஸ்டுக்கு வந்திருக்கே. குறைஞ்சது மூணு மாசமாவது ஆகறதுக்கு முந்தி ஊருக்குப் போறதைப் பத்திப் பேசக் கூடாது. ஆமாம்.'

ஐந்தாம் நாள் காலை மாமனாரிடம் அவன் பணத்தை ரொக்கமாய்க் கொடுத்தான். உதடு துடித்துக் கண்கலங்க, பேசத் தெரியாமல் அவன் முகத்தைப் பார்த்தவாறே அவர் நடுங்கும் கைகளால் வாங்கிக் கொண்டார்.

"ஆபரேஷனுக்கு முந்தி காவேரி அங்கே வருவா மாமா. இன்னும் ஏதாவும் நான் செய்யக்கூடிய உதவி இருந்தாலும் தயங்காம கேளுங்கோ. ஆபரேஷனை மெட்ராஸ்ல இன்னும் பெரிய டாக்டர் யாராவது பண்ணால் நல்லதுன்னு தோணினால் மாமியை இங்கே அழைச்சுண்டு வந்துடுங்கோ. யோசனையே வேணாம்."

"ஸ்ரீதர்... ஸ்ரீதர்... எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலேப்பா..."

"எதுவும் சொல்ல வேணாம். தைரியமாயிருங்கோ. சாயங்காலம் நான் வந்து ஸ்டேஷனுக்கு அழைச்சுண்டு போறேன்."

"நானும் ஆபீசுக்குக் கிளம்பறேம்பா. லலி, நீ குளிச்சதும் அப்பாவும் நீயுமாய்ச் சாப்பிட்டுடுங்கோ."

வேலைக்குப் புறப்பட்டுச் செல்லும் மகளையும் மருமகனையும் உமிழ்நீரை விழுங்கியபடி பார்த்துக் கொண்டு நின்றார் சங்கரன். லலிதாவுடன் இந்து மதத்தில் பரோபகாரம் பற்றிப் பேசியிருந்தது நினைவில் எழுந்தது.

உலகத் தொண்டு முழுமையும் ஏற்றுச் செய்வது அனைவருக்கும் சாத்தியமில்லைதான். ஆனால் இல்லறத்தில் இணையும் இருவர், அந்த ஆசிரமத்துக்கு விதித்துள்ள நியதிப்படி, தம் குறுகலைச் சற்றே விரிவு படுத்தினால், — குறைந்தபட்சம், இந்த வீட்டிலுள்ளது போல், கணவனின் மனிதர்களை மனைவியும் மனைவியின் மனிதர்களைக் கணவனும் தன் மனிதர்களாய் நினைத்துச் செயல்பட்டால் — குடும்பம் என்னும் இவ்வமைப்பு உலகளாவிய பரோபகாரத்தின் ஒரு சிறு வித்தாய், அறிகுறியாய், விளங்க முடியாதா...?

மனம் நிறைந்து பொங்கியது.



# செல்வமும் வளமையும் பகிர்ந்து வாழ்வதற்கே!

டாக்டர் நா. மகாலிங்கம்,
தலைவர், சக்தி பைனான்ஸ் லிமிடெட்.

வணக்கம்.

சக்தி நிதி நிறுவனம் விரைந்து வளர்ந்தோங்கி வரும் ஓர் சாதனை நிறுவனமாகும்.

வங்கிகள் செய்து வரும் பல்வேறு வைப்பு நிதிப் பாதுகாப்பு மற்றும் கடன் வசதிப் பணிகளை சிறந்த முறையில் செய்து வருகிறது.

இச்சிறப்பு மிக்க நிதி நிறுவனம் சேமிப்பாளர்கள் மற்றும் வாடிக்கையாளர்களுக்கு முன்பைவிட சிறப்பாக பணியாற்றுவதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

டிபாசிட்டுகள் எனப்படும் சேமிப்பு நிதியத்தை ரூ.100 கோடி அளவினை அண்மையில் நிறைவு செய்து மேலும் வளர்ந்து வருகிறது. இம்மகத்தான வளர்ச்சியில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டதுடன் பொது மக்களின் நம்பிக்கைக்கும் அபிமானத்திற்கும் மேலும் பாத்திரமாகி தொடர்ந்து அதனைப் பராமரித்து, முன்பைவிட வேகமாக முன்னேறத் திட்டமிட்டு வருகின்றது.

நமது தேசத்தின் பொருளாதாரக் கட்டுக்கோப்பு உறுதிமிக்கதாக உள்ளது. அதன் பலனாக பல்வேறு துறைகளில் அபிவிருத்திகள் ஏற்பட்டு வருகின்றன.

பருவ மழையானது அடுத்தடுத்து தொடர்ச்சியாக மும்முறை நன்கு பெய்துள்ளன. இதன் காரணமாக விவசாய மூலப் பொருள்கள் அமோக மகசூல் தந்து வேலை வாய்ப்புகளை அளித்தன. அதனால் பரவலாக உற்பத்தி பண்டங்களை வாங்கும் திறன் மக்களிடம் வளர்ந்துள்ளது.

வளைகுடாப் போர் வளர்முக நாடுகளில் வரலாறு காணாத பாதிப்புகளை ஏற்படுத்துமோ என்று நாம் அஞ்சினோம். அவ்வாறு எதுவுமே ஏற்படவில்லை. குறிப்பாக நமது நாட்டில் எவ்வித பின்னடைவுகளையும் அது உண்டாக்கவில்லை. நமது தேசத்தின் பொருளாதாரம் நமது சுய சக்தியின் மீது அமைந்துள்ளது என்பதை காட்டிட இது ஒன்றே போதும்.

வளைகுடா யுத்தம் நிரந்தரமாக முடிந்துவிட்டது. அதற்கு அடையாளமாக நமது ஏற்றுமதிகள் அதிகரிக்கத் தொடங்கிவிட்டன. நமது மத்திய அரசு எரிபொருள் எண்ணெய்ச் சிக்கலை திறமையோடும் தொலைநோக்கோடும் சமாளித்துவிட்டது.

எதிர்காலத்தை நோக்கி மிகுந்த நம்பிக்கையோடும் உறுதியோடும் செல்வதற்கு ஏற்ற சூழ்நிலை உருவாகியிருக்கிறது.

சக்தி நிதி நிறுவனம் இதற்கு ஏற்ப மேலும் மேலும் செல்வாதாரங்களை திரட்டவும் புதியபுதிய நிதி வாணிபப் பணிகளை செய்யவும் ஆர்வத்தோடு திட்டமிட்டுள்ளது.

எமது எதிர்கால விரிவாக்கத் திட்டத்தில் உள்ள விசேஷமான அம்சம் சக்தி நிதி நிறுவனத்தின் சாதனை வளர்ச்சிக்கு காரணமாக விளங்கிய வாடிக்கையாளர் மற்றும் சேமிப்பாளர்களுக்கு ஒருமுனைப்பட்ட சேவைகளை தொடர்ந்து பணியாற்ற உள்ளோம் என்பதை மகிழ்வுடன் தெரிவிக்கின்றோம்.

ஒளிமயமான எதிர் காலத்தை நோக்கி சக்தி பைனான்ஸ் நிறுவனம் முன்னேறிச் செல்கிறது. எங்களது இந்த முன்னேற்றத்தில் எங்களோடு பங்கு கொண்டு ரூ.100 கோடி சேமிப்பு நிதியத்தை திரட்ட உதவியவர்களின் ஒத்துழைப்பை தொடர்ந்து நாடுகின்றோம்.

தங்கள் அன்புள்ள,

நா. மகாலிங்கம்

நா. மகாலிங்கம்

---



ரூ. 50 முதல் பரிசு பெறும் கட்டுரை

# பயத்தத்தில் பாதித்தது!

சில வருடங்களுக்கு முன்பு வரை ''தாழ்வு மனப்பான்மை'' என்ற கொடிய மனோவியாதிக்கு ஆளாகி இருந்த என்னைக் கண்டு நானே பல நேரம் வேதனைப்பட்டிருக்கிறேன். அப்போது கிடைத்த அருமருந்தாய் வாழ்க்கையில் முன்னேறுவதற்கான கருத்துக்களையும், தாழ்வு மனப்பான்மையைப் போக்க உதவும் சில பயிற்சிகளையும் தெளிவாகத் தாங்கி வந்த ஒரு நூல் என் வாழ்வின் திசையையே மாற்றியது. என்னைக் கவர்ந்த அந்த நூல் லேனா தமிழ்வாணனின் ''தாழ்வு மனப்பான்மையைப் போக்குவது எப்படி?'' என்ற புத்தகமே.

தாழ்வு மனப்பான்மையினால் பொறாமை, பயம், தயக்கம் போன்ற குணங்களைக் கொண்டிருந்த என்னை இந்த நூல் மாற்றி அமைத்தது. ''இது நடக்குமா? நம்மால் இது முடியுமா? இதைச் செய்தால் சிறப்பாக வருமா?'' என ஒவ்வொரு காரியத்தையும் தயக்கத்துடன் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்த எனக்கு இப் புத்தகத்தில் ''வளர்ச்சிக்கு வழி'' என்ற தலைப்பின் கீழ் தரப்பட்ட கருத்துக்கள் புத்துயிர் அளித்தன.

1. சமூக வாழ்க்கையின் அடிப்படைகள், கடமை இவற்றை அறிந்திருப்பது.
2. குறிக்கோள்கள், அதனை நிறைவேற்றும் இடம், தளரா முயற்சி இவற்றைப் பெறுவது.
3. நம்பிக்கை என்னும் வெளிச்சத்தில் எப்போதும் செல்வது.
4. எந்த அபாயத்தையும், பயமோ பலவீனமோ இன்றி எதிர்ப்பது.

''ஒரு மனிதன் எத்தனை வயது வரை வாழ்ந்தான் என்பது முக்கியமல்ல; அவன் எப்படி வாழ்ந்தான் என்பதுதான் முக்கியம்'' என்ற சொற்கள் எனக்கு அசாதாரண நம்பிக்கையையும், பிரச்னைகளை எதிர்கொள்ள மனோதிடத்தையும் நேர்வழியில் செல்லத் துணிவையும் அளித்தன.



வாழ்க்கையில் முன்னேறுவதற்குச் சந்தர்ப்பங்கள், வாய்ப்புகள் இவற்றை எப்படிப் பயன்படுத்திக் கொள்வது போன்ற அருமையான வழிமுறைகளையும் இந்நூல் எனக்குக் கற்றுத் தந்தது. இவ்வளவு ஏன், பயத்தின் காரணமாகக் கல்லூரிப் படிப்பை வெறுத்த என் பயத்தை நீக்கி, இன்று இளங்கலை இரண்டாம் ஆண்டு (அரசியல் — அறிவியல்) பயிலும் மாணவனாக மாற்றிய பெருமை இந் நூலையே சாரும்.

மனச்சோர்வடையும் போதெல்லாம் இந்தப் புத்தகத்தை எடுத்து நான் படிக்கும் போது, பாதை தேடி அலைபவனுக்குச் சேரும் இடத்தையே காண்பது போல் உற்சாகத்தைத் தருகிறது.

— அ. சிவக்குமார்,
இளங்கலை அரசியலறிவியல்,
இரண்டாம் ஆண்டு,
மதுரை காமராசர் பல்கலைக் கழக
அஞ்சல்வழிக் கல்வி.

---

## இன்று இல்லாத ஒன்று!

''சில புத்தகங்கள் ருசி பார்க்கப் படவேண்டியவை; சில விழுங்கப்பட வேண்டியவை; மிகச் சில புத்தகங்களே மென்று தின்று ஜீரணிக்கப்பட வேண்டியவை'' என்றார் ஓர் அறிஞர். எத்தனை முறை படித்தாலும் அலுக்காமல், ஒவ்வொரு முறை படிக்கும் போதும் புதிய புதிய எண்ணங்களை உருவாக்கி, கதையின் காட்சிகளும், பாத்திரங்களும், வசனங்களும் மனத்தோடு ஒன்றிப் போய் விடுகின்ற அபூர்வமான புத்தகங்களில் ஒன்றாக, அமரர் கல்கி அவர்கள் எழுதிய ''பொன்னியின்



செல்வன்'' என்ற அமர காவியம் விளங்குகிறது. ஒவ்வொரு பாத்திரமும், அதன் குணாதிசயங்களும் பல பாதிப்புகளை மனத்தில் ஏற்படுத்துகின்றன. கூடவே சுவாரசியம் குன்றாமல் ஆழ்ந்த கருத்துக்களைக் கூறிச் சிந்திக்க வைக்கின்றார் அமரர் கல்கி. அவற்றுள் மிகவும் முக்கியமானது நாட்டுப்பற்று.

கதையில் அனைத்துப் பாத்திரங்களும் கூற வருகின்ற ஒரே கருத்து: நாட்டுப்பற்று. சோழ நாட்டிற்காகத் தன் அண்ணனையே கொல்லத் துணிந்த சின்னப் பழுவேட்டரையர், சோழன் அரண்மனையில் இருந்து, பாண்டிய நாட்டிற்குச் சேவை புரிந்த நந்தினி, தத்தம் நாட்டிற்காக, பல இன்னல்களைத் தாங்கி நின்ற ஆழ்வார்க்கடியான், ரவிதாஸன் போன்ற பாத்திரங்கள் எல்லோருமே — கதாநாயகர்கள் மட்டுமின்றி வில்லன்களும் — தங்கள் நாட்டிற்குத் துரோகம் செய்யாமல் தாயின் மீது செலுத்துகின்ற அன்பினை நாட்டின் மீது செலுத்தக்கூடிய வகையில் செயல்படுகிறார்கள். சுயநலத்துக்காக யாரும் காரியம் செய்யவில்லை. கதையின் மூலக் கருவான ''நாட்டுப்பற்று'' தற்காலத்தில் இல்லாத ஒன்றாக இருப்பதனால், இது என்னை வெகுவாகப் பாதித்தது.

— செ. ப. தர்சனா,
இளங்கலை (வரலாறு), மூன்றாமாண்டு,
எத்திராஜ் மகளிர் கல்லூரி,
சென்னை — 105.

## அரியாசனத்தில் ஒரு துறவி!

மனித சமுதாயத்தில் ஏன் இத்தனை நரித்தந்திரங்கள், உயிர்ப் போராட்டங்கள், தீராத் துயரங்கள், காம வெறியாட்டங்கள்... ஏன்? ஏன்?

மனித வாழ்வின் ஏதேனும் ஒரு கட்டத்தில் இப்படி ஒரு கேள்வி எழுந்து நம்மைத் துன்புறுத்தும். குழம்பித் தவிக்க நேரிடும்.

அந்த நேரத்தில் கிடைத்தது ''மார்க்கஸ் அரேலியஸ்''ன் ''ஆத்ம சிந்தனை'' என்னும் நூல். மூதறிஞர் ராஜாஜியின் எளிய தமிழ் மொழிபெயர்ப்பில் அந் நூல், அரேலியஸின் நூற்றியெண்பது அறிவுரைகளைக் கொண்டது. அத்தனையும் அற்புத ஒளிவீசும் வைரங்கள்.

சூதாட்டத்திலும், காமக் களியாட்டத்திலும், செல்வச் செருக்கிலும் ஊறித் திளைத்த கிரேக்க அரசர்களிலிருந்து மாறுபட்டவர் அரேலியஸ்.

சாவு பற்றிப் பேசும்போதே நடுங்கும் மக்களிலிருந்து தனித்து நின்று, தனக்குத் தானே சொல்லிக் கொள்கிறார், ''நீ பிறப்பதற்கு முன் எல்லையற்ற காலம், இறந்த பின்னும் எல்லையற்ற காலம். இதன் மத்தியில் மூன்று மாதம் இருப்பின் என்? முந்நூறு வருஷம் இருப்பின் என்? மரத்திலிருந்து கீழே விழும் பழத்தைப் பார்! தன் வாழ்க்கையை எவ்வளவு சந்தோஷமாகவும், லகுவாகவும் நடத்தி, நழுவி விழுந்து பிறந்த மண்ணில் அடங்கிப் போகிறது! அதைப் பின்பற்றுவாயாக!'' என்று.

உலகத்தின் ஒவ்வொரு செயலிலும் பின்னிப் பிணைந்துள்ள நல்வினை தீவினைகளுக்குக் காரணத்தைத் தேடுவோருக்கு அவரது குறிப்புகள் நல்ல பதில்களாக மட்டும் வருவதில்லை. அவருடைய அறிவின் விசாலத்தைக் காட்டவும் செய்கின்றன.

பேரதிகாரம் படைத்த அவ்வரசர் அறிவிலிகள் செய்யும் குற்றங்களை மன்னிக்



கவும் மறக்கவும் எத்தனை அக்கறை எடுத்துக் கொண்டார் என்பதுதான் வியப்பிலும் வியப்பு. ''தீங்கிழைத்தவனிடமும் அன்பு செய்வது உன் தருமம். மனம் ஒவ்வாமல் தான் ஒருவன் தவறு செய்கிறான். உன் ஆன்மாவுக்கு அவன் செயலால் ஒரு கேடும் நேரிடவில்லை. இவற்றை மனத்தில் வைத்தாயானால் நீ அவனிடம் அன்பு காட்டுவது எளிதாகும்.''

அரச பீடத்தில் அமர்ந்திருந்தும் பற்றற்ற துறவு வாழ்வை நடத்திய கிரேக்க ஞானியின் பொன்மொழிகள் வழிகாட்டுகின்றன. வழி நடப்போமா?

— சாவித்திரி,
எம். ஃபில். ஏ. இறுதியாண்டு,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி.

## விஞ்ஞானக் கதைகளில் முதலிடம்

தமிழில் விஞ்ஞானக் கதைகள் எழுதுபவர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். அவர்களில் எவ்விதச் சந்தேகமுமின்றி முதலிடம் வகிப்பவர் சுஜாதா. அவர், 'என் இனிய இயந்திரா', 'மீண்டும்



ஜீனோ' என்று இரு பகுதிகளாய் எழுதிய விஞ்ஞான நாவலே என்னை மிகவும் பாதித்தது.

பொதுவாக விஞ்ஞானத்தை எழுதுபவர்கள் செய்யும் தவறு இன்றைய காலகட்டத்திலிருந்து வெகுகாலம் தாண்டிய கால கட்டத்தைக் கதைக்களனாக எடுத்துக் கொள்வதுதான். அப்படி எடுத்துக் கொள்வதால் ஏராளமான அறிவியல் முன்னேற்றம் ஏற்பட்டு விட்டதாகப் புருடா விட்டு, மனம் போன போக்கில் கதையை வளர்க்க அவர்களுக்கு வசதி ஏற்படுகிறது. ஆனால் அதைப் படிக்கும் வாசகனுக்கு விஞ்ஞானக் கதையா அல்லது விட்டலாச்சாரியா கதையா என்ற சந்தேகமும் ஏற்படுகிறது! ஆனால் இந்த நாவலில் இன்று உள்ள அறிவியல் வளர்ச்சியோடு இப்போது நடந்து வரும் ஆராய்ச்சிகளால் நாளை விளையக்கூடிய முன்னேற்றங்களை மட்டுமே சார்ந்து, கதை வளர்க்கப் படுவதால் நம்பும்படியாகவும் ரசிக்கும்படியாகவும் இருக்கிறது. நாவலாசிரியர் ஒரு விஞ்ஞானி என்பதாலேயே இது சாத்தியமாகிறது.

இன்று உலகெங்கும் உள்ள பல்வேறு ஆராய்ச்சிக் கூடங்களில் 'ஹியூரிஸ்டிக் கம்ப்யூட்டரை' நேர்த்தி செய்யும் முயற்சியில் தலையைப் பிய்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கம்ப்யூட்டர் சுயமாகக் கற்றுக் கொள்ளும் திறமை வாய்ந்தது. இந்த நவீன கம்ப்யூட்டர் தத்துவத்தை அவர் இந்த நாவலில் இயல்பாகப் புகுத்தி திறம்படக் கதையைக் கொண்டு செல்கிறார். ஒரு கம்ப்யூட்டர் இயல் மாணவன் என்ற முறையில் இதை வெகுவாக என்னால் ரசிக்க முடிந்தது.

நாவல் முழுதும் அவ்வப்போது ஜீனோ படிக்கும் புத்தகங்களைச் சேகரித்தால் ஓர் அற்புதமான குட்டி நூலகத்தை உருவாக்க முடியும். ஒரு நல்ல இலக்கிய கர்த்தா தான் கற்ற கைம் மண்ணளவைத் தனது வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளுதல் அவசியம். ஆனால் சுஜாதா கடலளவைப் பகிர்ந்தளிக்கிறார். இதன் மூலம் அவரது வசீகரமான எழுத்துத் திறமைக்குப் பின்னணியாய் இருக்கும் அவருடைய பரந்த வாசிப்பை அறிந்து கொள்ள முடிகிறது.

மிகவும் கடினமான அறிவியல் கருத்துக்களையெல்லாம் தனது அற்புதமான நடையில் எளிமைப்படுத்திக் கதையோட்டத்துடன் கலந்து அவர் வழங்கும் லாவகம் பிரமிப்பூட்டுகிறது.

— மு. செந்தில்,
மூன்றாம் ஆண்டு,
கம்ப்யூட்டர் சைன்ஸ்,
மெப்கோ பொறியியற் கல்லூரி,
அர்னாத்தூர் போஸ்ட்,
சிவகாசி — 626 005.

---

## கரையைக் காண முடியாது; ஆழத்தை அளவிட இயலாது!

இந்து மதம் பழம்பெருமை வாய்ந்தது. கரை காண முடியாத கடல் போன்றது. அதன் ஆழத்தை அறிய இயலாது. அதிலே கூறப்படும் நெறிகளை, தத்துவங்களை, தர்மங்களை எளியவரும் புரிந்து கொள்ளக் கூடிய முறையில் தந்திருக்கிறார் கவியரசு கண்ணதாசன் தன் ''அர்த்தமுள்ள இந்து மதம்'' எனும் நூலில். சகிப்புத் தன்மை; பிற மதத்தவரை மதித்தல், பெரியோரைப் பணிதல், பெற்றோரைப் பேணிக் காத்தல்... அப்பப்பா! எவ்வளவு விஷயங்கள்! கம்பர் கூறியபடி பூனை கடல் நிறைந்த பாலை நாவால் நக்கிக் குடிப்பது போல்தான் இந்து மதத்தைப் பற்றி நாம் முற்றும் தெரிந்து கொள்ள முயல்வதும் என்ற எண்ணம் இந்த நூலைப் படிக்கும் போது நமக்கு ஏற்படுகிறது.

நல் நடத்தைக்கு வழிகாட்டுவது போல் குட்டிக் கதை உதாரணங்களுடன் கண்ணதாசன் இந்து மதத்தின் கருத்துக்களை விளக்குவதைப் படிக்க நம் மனத்திலுள்ள அழுக்காறுகள், விரோதங்கள் முதலியவை அகன்று அங்கே தெய்வ நம்பிக்கை, மனித நேயம், அன்பு முதலிய உணர்ச்சிகள் பீறிட்டுக் கொண்டு வருகின்றன.



— டி. எஸ். கிருஷ்ணன்,
இரண்டாமாண்டு பொறியியல்
(மெகானிகல்),
நேஷனல் பொறியியல் கல்லூரி,
நாலாட்டின்புத்தூர்,
கோவில்பட்டி தாலுகா.



# சிவகாமியின் சபதம்







இருபத்திரண்டாம் அத்தியாயம்

## அசோகபுரத்தில்

காஞ்சிமா நகரத்திலிருந்து ஏழு காத தூரத்தில், தில்லைப் பதிக்குப் போகும் மார்க்கத்தில், அசோகபுரம் என்னும் ஊர் இருந்தது. இந்த ஊரின் மத்தியில் பரத கண்டத்தை ஒரு குடை நிழலில் ஆண்ட சக்கரவர்த்திகளுக்குள்ளே ஒப்புயர்வற்ற தர்ம சக்கரவர்த்தியான அசோகவர்த்தனர், தேசமெங்கும் நிலைநாட்டிய ஸ்தம்பங்களில் ஒன்று கம்பீரமாய் நின்றது.

ஒரு காலத்தில் இந்த அசோக ஸ்தம்பத்தைச் சுற்றியிருந்த புத்த விஹாரங்களில் ஓராயிரம் புத்த பிக்ஷுக்கள் வாசம் செய்தார்கள். புத்த மதத்தைச் சேர்ந்த கிரகஸ்தர்கள் வாழ்ந்த ஆயிரக்கணக்கான வீடுகளும் இருந்தன. மாலை நேரத்தில் புத்த சைத்தியங்களில் பகவான் புத்தருக்கு ஆராதனை நடக்கும் போது தூபங்களிலிருந்து எழும் நறுமணப் புகையானது, ஊரெல்லாம் கவிந்திருக்கும். நூற்றுக்கணக்கான பூஜை மணிகள் கண கணவென்று ஒலித்துக் கொண்டிருக்கும். புத்தரின் சந்நிதியில் ஆயிரக்கணக்கான தீபங்கள் ஜொலித்துக் கொண்டிருக்கும். பிக்ஷுக்களும், கிரகஸ்தர்களும் கையில் புஷ்பம் நிறைந்த தட்டுக்களை ஏந்திக் கொண்டு, பக்தி பத்தியாகச் சைத்தியங்களுக்குப் போய்க் கொண்டிருப்பார்கள்.

அத்தகைய அசோகபுரமானது இப்போது பாழடைந்து, நிர்மானுஷ்யமாய்க் கிடந்தது. சைத்தியமும் விஹாரமும் சேர்ந்தமைந்த ஒரே ஒரு கட்டடத்திலே மட்டும், ஒரு சிறு தீபத்தின் ஒளி காணப்பட்டது. மற்றக் கட்டடங்கள் இடிந்து, தகர்ந்து பாழாய்க் கிடந்தன. இடியாத கட்டடங்களில் இருள் சூழ்ந்திருந்தது.

தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், அசோக சக்கரவர்த்தியால் நிலைநாட்டப்பட்ட தர்மபோதனை ஸ்தம்பம் மாத்திரம் தாவள்யமான சந்திரிகையில், "தர்மத்துக்கு என்றும் அழிவில்லை" என்பதை ஸ்தாபித்துக் கொண்டு தலை தூக்கி நின்றது.

இத்தகைய அசோகபுரத்துக்கு இருட்டி இரண்டு நாழிகைக்குப் பிறகு ஆயனரும் சிவகாமியும் மற்றவர்களும் வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் அசோகருடைய ஸ்தம்பத்தின் அருகில் வந்தபோது, ஆயனர் வானை நோக்கி நெடிதோங்கி நின்ற அந்த ஸ்தம்பத்தை அண்ணாந்து நிலா வெளிச்சத்தில் பார்த்தார். அது வரை அவர்களுக்குள் நிலவிய மௌனத்தைக் கலைத்துக்கொண்டு, "ஆஹா! அசோக சக்கரவர்த்தி எத்தகைய சர்வோத்தமர்! உலகத்திலே தோன்றும் அரசர்கள், சக்கரவர்த்திகள் எல்லாம் அசோகரைப் போன்றவர்களாயிருந்தால், இந்தப் பூவுலகம் எவ்வளவு ஆனந்த மயமாயிருக்கும்? யுத்தம் என்னத்திற்கு? பகைமை என்னத்திற்கு? ஒருவருடைய இரத்தத்தை ஒருவர் சிந்துவது என்னத்திற்கு? பூவுலக

**அமரர் கல்கி**

மாந்தர்கள் எல்லாம் ஒருவருக்கொருவர் அன்பு செய்து கொண்டு, அஹிம்சையை மேற்கொண்டு, ஆனந்தமாய் வாழலாகாதா?" என்றார்.

அப்போது சிவகாமி குறுக்கிட்டு, "அப்பா! இதென்ன! சற்று முன்னாலே தான் உங்களுக்கும் கத்தி எடுத்துக்கொண்டு யுத்தம் செய்ய ஆசை உண்டாவதாய்ச் சொன்னீர்கள். இப்போது அன்பு, அஹிம்சை, ஆனந்தம் என்கிறீர்களே உங்களுடைய மனது இப்படிச் சஞ்சலம் அடைந்து நான் பார்த்ததேயில்லை!" என்றாள்.

"உண்மைதான், சிவகாமி! என் மனது இப்போதெல்லாம் ஒரு நிலையில் இல்லை. புத்த பகவான் இந்த உலகத்தில் அன்பின் ஆட்சியை நிலைநாட்டப் பார்த்தாரே? அவருடைய பிரயத்தனம் ஏன் வீணாகப் போயிற்று என்பதை நினைத்து மனம் சஞ்சலப்படுகிறது" என்றார் ஆயனர்.

பிக்ஷு அப்போது வாய் திறந்து, "ஆயனரே! புத்த பகவானுடைய போதனையை ஏற்றுக்கொள்ளும் பக்குவம் மனித குலத்துக்கு இன்னும் ஏற்படவில்லை! அதற்கு என்ன செய்வது?" என்றார்.

யாரும் எதிர்பாராதபடி குண்டோதரன் சம்பாஷணையில் கலந்து கொண்டு, "மனித குலம் என்று பொதுப்படையாகச் சொன்னால் என்ன பிரயோசனம், அடிகளே? பிராணிகளிலே புலியும் இருக்கிறது, பசுவும் இருக்கிறது. ஜந்துக்களிலே பாம்பும் இருக்கிறது. அணிலும் இருக்கிறது. அதுபோலவே மனிதர்களுக்குள்ளும் எத்தனையோ வித்தியாசம் இருக்கிறது. மௌரிய வம்சத்து அசோகவர்த்தனரைப் போலவேதான் நமது மகேந்திர பல்லவரும் தம் ராஜ்யத்தில் அன்பு மதத்தை ஸ்தாபிக்க முயன்றார். யுத்தம் என்பதே வேண்டாம் என்று நினைத்தார். அதைக் கெடுப்பதற்கு ஒரு புலிகேசியும், ஒரு துர்விநீதனும், ஒரு பாண்டியனும் புறப்பட்டு வந்தால், மகேந்திர பல்லவர் என்ன செய்வார்? பூலோகத்தில் பாம்பு இருக்கும் வரையில் கீரிப் பிள்ளையும் இருக்க வேண்டியது தான். கீரிப்பிள்ளை இல்லாவிட்டால், மனிதனாவது தடியை எடுத்துப் பாம்பை அடித்துத்தானே தீர வேண்டும்?" என்றான்.

"அடே அப்பா! நமது குண்டோதரன் இவ்வளவு வாசாலகன் என்று எனக்குத் தெரியவே தெரியாதே!" என்றார் ஆயனர். புத்த பிக்ஷுவோ அருவருப்புடனும் ஆத்திரத்துடனும் அவனை நோக்கினார்.

சிவகாமி, "குண்டோதரன் சொல்வது நியாயம், அப்பா! உலகத்தில் பொல்லாதவர்கள் இருக்கும் வரையில் அவர்களை அடக்கக்கூடிய வீர புருஷர்களும் வேண்டும் அல்லவா?" என்றாள்.

"ஆம் சிவகாமி, ஆமாம்! அது மட்டுமல்ல. உலகத்தில் எல்லாம் அன்புமயமாய்ப் போய்விட்டால், வீரம் என்பதே இல்லாமற் போய்விடும். வீரம் இல்லாத உலகம் என்ன உலகம்? அப்புறம் கதை ஏது, காவியம் ஏது, கலைதான் ஏது?" என்றார் ஆயனர்.

குண்டோதரன், "குருவே! நான் ஒன்று சொல்லட்டுமா? இந்த அசோகர் ஸ்தம்பம் இங்கே வெறும் ஸ்தம்பமாக நின்று கொண்டிருப்பதில் யாருக்கு என்ன பிரயோசனம்? இதிலுள்ள உபதேசத்தைப் படித்து, அதைப் பின்பற்றி நடப்பார் யார்? இந்த ஸ்தம்பத்தை என்ன செய்யவேண்டும் என்று நான் சொல்லட்டுமா?...." என்று கூறிக் கொண்டே குண்டோதரன் ஸ்தம்பத்தைக் கையினால் தட்ட அது 'டாண்! டாண்!' என்று ஒலி செய்தது.

பின்னர், "நல்ல எஃகினால் செய்திருக்கிறது; இதைக் கொல்லன் உலையில் போட்டு உருக்கி, வாள்களாகவும் வேல்களாகவும் செய்ய வேண்டும். இந்த ஸ்தம்பத்தை உருக்கினால், குறைந்த பட்சம் பத்தாயிரம் வாள்களும் வேல்களும் செய்யலாம்!" என்றான் குண்டோதரன்.

அசோக ஸ்தம்பத்தினருகில் மேற்கண்ட சம்பாஷணை நடந்து கொண்டிருக்கையில், நாகநந்தி சற்று முன்னாலேயே நடந்து சென்று அருகிலே இருந்த புத்த விஹாரத்தை அடைந்தார். அதேசமயம் விஹாரத்துக்குள்ளேயிருந்து வயோதிக பிக்ஷு ஒருவர் கையில் தீபத்துடன் வாசலில் வந்தார். அந்தத் தீபத்தின் வெளிச்சத்தில் விஹாரத்தின் வாசலிலே நின்று கொண்டு, பிக்ஷு குண்டோதரன் கொண்டு வந்த ஓலையைப் படித்தார். அப்போது அவருடைய முகத்தில் உண்டான மாறுதல்களைத் தீபச் சுடரின் சிவந்த ஒளியில் பார்த்துக் கொண்டிருந்த வயோதிக பிக்ஷுவே பயந்து போனார் என்றால், மற்றவர்கள் பாராததே நல்லதாய்ப் போயிற்று என்று சொல்லவேண்டும்.

நாகநந்தி ஓலையைப் படித்து முடித்ததற்கும் ஆயனர் முதலியோர் விஹாரத்தின் வாசலில் வந்ததற்கும் சரியாயிருந்தது. உடனே அவர் தமது முகத்திலும் குரலிலும் அமைதி வருவித்துக் கொண்டு, மற்றொரு பிக்ஷுவைப் பார்த்து, "சுவாமி! இவர்கள் எல்லாம் ஐந்தாறு தினங்கள் தங்கியிருக்கும்படி நேரிடலாம். அதற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுக்க வேண்டும்" என்று கூறினார். பின்னர் ஆயனரைப் பார்த்துச் சொன்னார்:

''ஆயனரே! உம்முடைய சீடனுக்கு உண்மையில் நான் நன்றி செலுத்தவேண்டும். இந்த ஓலையில் மிகவும் முக்கியமான விஷயந்தான் அடங்கியிருக்கிறது. இதைக் கொண்டு வந்தவனை ஏரியிலே தள்ளிவிட்ட போதிலும் ஓலையைக் கொண்டு வந்தானல்லவா? இந்த ஓலையில் அடங்கிய விஷயத்தைக் கவனிப்பதற்காக நான் அவசரமாய்ப் போக வேண்டியிருக்கிறது. திரும்பி வருவதற்கு இரண்டு மூன்று நாள் ஆனாலும் ஆகலாம். அதுவரையில் நீங்கள் இங்கேயே சுகமாகத் தங்கி இருங்கள். இந்தப் பிக்ஷு உங்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுப்பார். மேலும் உங்களுக்கு ஒத்தாசையாகக் குண்டோதரனும் வந்து சேர்ந்து விட்டானல்லவா?''

இந்தக் கடைசி வாக்கியத்தைச் சொல்லும் போது, குண்டோதரனுடைய மார்பையே கீறி உள்ளே பார்ப்பது போல் பார்த்த நாகநந்தி, மறுகணம் சிவகாமியை நோக்கி, கனிவு ததும்பிய குரலில், ''சிவகாமி! உங்களை அழைத்துக் கொண்டு வந்து இப்படி நடுவழியில் விட்டுவிட்டுப் போகிறேனே என்று நினைக்காதே! மிகவும் அவசர காரியமானபடியாலேதான் போகிறேன். சீக்கிரத்தில் திரும்பிவந்து உங்களுடன் சேர்ந்து கொள்வேன்'' என்றார்.

அநேகமாக எல்லாப் புத்த விஹாரங்களிலும் உள்ளதுபோல் இந்தப் பாழடைந்த விஹாரத்திலும் நடுவில் புத்தர் சந்நிதி இருந்தது. இரண்டு பக்கத்திலும் பிக்ஷுக்கள் வசிப்பதற்குரிய அறைகள் இருந்தன. ஒரு பக்கத்து அறைகள் ஆயனருடைய குடும்பத்துக்காக ஒழித்துக் கொடுக்கப்பட்டன.

அவர்கள் தங்களுடைய அறைகளுக்குச் சென்ற பிறகு, இன்னொரு பக்கத்திலிருந்த இருண்ட அறைகளுக்கு நாகநந்தி சென்றார்.

இருபத்துமூன்றாம் அத்தியாயம்

## தோற்றது யார்?

சிவகாமிக்கு அன்றிரவு வெகு நேரம் வரையில் தூக்கம் வரவில்லை; அன்று குண்டோதரன் கூறிய விஷயங்களையெல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்துக்கொண்டிருந்தாள். குமார சக்கரவர்த்தியைப்பற்றி நாகநந்தி கூறிய அவதூறுகளைத் தான் முழுதும் நம்பி விட்டதை நினைத்து வெட்கினாள். நாகநந்தியின் பேரில் அவளுக்குக் கோபம் கோபமாய் வந்தது. அவருடைய பொய்மொழிகளைக் குறித்துக் கேட்டு, அவரை ஏளனம் செய்ய வேண்டுமென்ற ஆவல் அவள் மனத்தில் பொங்கிக்கொண்டிருந்தது.

இத்தகைய எண்ணங்களுக்கிடையில், மாமல்லரின் விருப்பத்தின்படி, தான் அரண்ய வீட்டில் இல்லாமற் போனது பற்றி அவருடைய கோபம் எத்தகையதாயிருக்குமோ என்ற கவலையும் தோன்றிக் கொண்டிருந்தது. அதை அவ்வளவு மன்னிக்க முடியாத பெருங் குற்றமாக மாமல்லர் கொள்ள மாட்டார் என்று, அவள் தன்னைத்தானே ஆறுதல் செய்து கொண்டாள். இவ்விதம் பலவாறாகச் சிந்தித்துக் கொண்டிருந்து, கடைசியில் தன்னையறியாது மேலிட்டு வந்த களைப்பினால் கண்ணயர்ந்தாள்.

அவள் அரைத் தூக்கமாயிருந்தபோது, சமீபத்தில் எங்கேயோ பெருங் கூக்குரலைக் கேட்டுத் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்திருந்தாள். கவனித்துக் கேட்டபோது, 'ஐயோ முறையோ' என்று குண்டோதரன் ஓலமிடும் சத்தமும், அத்துடன், 'டக் டக் டக் டக்' என்று குதிரை பாய்ந்து செல்லும் சத்தமும் கலந்து கேட்டன.

அயர்ந்து தூங்கிய ஆயனரைச் சிவகாமி எழுப்பினாள். இருவரும் வாசலில் வந்து பார்த்தபோது, அங்கே ஓலமிட்டுக் கொண்டிருந்த குண்டோதரன், ''ஐயோ! குருவே; என்னுடைய குதிரையைப் பிக்ஷு திருடிக் கொண்டு போய் விட்டார்!'' என்று கூச்சலிட்டான். ஆயனர் அவனுக்கு, ''அப்பனே! அந்தக் குதிரை உன்னுடையதல்லவே!'' என்று சமாதானம் சொல்லிப் பார்த்தார்.

குண்டோதரன், ''அப்படித்தான் நாகநந்தி குதிரையைத் திருடிக் கொண்டு போனாரே? என்மேல் என்னத்திற்காகப் பாம்பைப் போட வேண்டும்!'' என்று அலறினான்.

''அது என்ன சமாசாரம்?'' என்று ஆயனர் கேட்டதற்கு, குண்டோதரன் கூறிய விவரமாவது: புத்த பிக்ஷு இரகசியமாய் எழுந்து வந்து, வாசலில் கட்டியிருந்த குதிரையை அவிழ்த்து, அதன் மேல் ஏறிக் கொண்டார். அதேசமயத்தில் தற்செயலாகக் கண் விழித்த குண்டோதரன் ஓடிப் போய்க் குதிரையைப் பிடித்தான். பிக்ஷு தம் கையிலிருந்த ஒரு பையை அவிழ்த்து அதற்குள்ளிருந்து எதையோ எடுத்து அவன் மேல் வீசினார். அது ஒரு நாகப்பாம்பு என்று கண்டதும், குண்டோதரன் அலறிக்

கொண்டு அப்பால் ஓட, குதிரையை விட்டுக் கொண்டு பிக்ஷு போய்விட்டார்.

குண்டோதரனுடைய வார்த்தையில் ஆயனருக்கும் சிவகாமிக்கும் நம்பிக்கை உண்டாகவில்லை. ஏதோ உளறிக் கொட்டுகிறான்; ஒருவேளை கனவு கண்டானோ என்னவோ என்று நினைத்தார்கள்.

குண்டோதரன், "குருவே! என்னுடைய அருமைக் குதிரையை விட்டுவிட்டு என்னால் இருக்க முடியாது. எப்படியாவது திரும்பப் பிடித்துக் கொண்டு வந்து சேர்வேன்!" என்று சொல்லி விட்டு, குதிரை போன திசையில் அவனும் ஓடி மறைந்தான்.



ஆயனரும் சிவகாமியும் அசோக புரத்துக்கு வந்து புத்த விஹாரத்தில் வசிக்கத் தொடங்கி ஐந்து தினங்கள் ஆயின.

முதல் மூன்று நாள் விசேஷம் ஒன்றும் நடைபெறவில்லை. சிவகாமிக்குப் பொழுது போவது கஷ்டமாயிருந்தது. ஆயனருக்கோ அதை விடக் கஷ்டமாயிருந்தது. ஆனால், புத்த பிக்ஷுவின் துணையை நம்பி வந்தவர்களாகையால், அவருடைய யோசனை இல்லாமல் மேலே எங்கே போவது என்பதை ஆயனரால் நிச்சயிக்கக் கூடவில்லை. குண்டோதரன் கூறிய விவரங்களைக் கேட்ட பிறகு, சிவகாமிக்கு மேலே போகும் ஆவலே இல்லாமல் போய் விட்டது. "திரும்பிக் காஞ்சிக்குப் போனால் என்ன?" என்ற எண்ணம் அடிக்கடி தோன்றியது.

இந்த நிலைமையில், அவர்கள் அசோக புரத்துக்கு வந்த நாலாம் நாள் இரவு, சில அபூர்வ சம்பவங்கள் நடைபெற்றன.

அன்று அஸ்தமன நேரத்தில் எங்கேயோ வெகு தூரத்தில் வான முகட்டின் அருகில், இடைவிடாமல் இடி இடிப்பது போன்ற சத்தம் முதலிலே வெகு இலேசாகக் கேட்டது. உற்றுக் கேட்கக் கேட்க, சத்தம் அதிகமாகி வந்ததாகத் தோன்றியது. சற்று நேரத்துக்



கெல்லாம் அதுவே சமுத்திர கோஷம்போல் தொனிக்கத் தொடங்கியது. முதலிலே தூரத்திலிருந்த சமுத்திரம் வரவர நெருங்கி வருவது போலவும் இருந்தது.

திடீரென்று சத்தம் பெரிதாகி அருகிலே நெருங்கி, பல்லாயிரம் பேர் தடதடவென்றுஓடி வருவதுபோன்ற சத்தமாக மாறிற்று.

ஆயனரும் சிவகாமியும் உள்ளேயிருந்து வாசற் பக்கம் ஓடி வந்து பார்த்தார்கள். சற்றுத் தூரத்தில் மரங்களின் இடுக்கு வழியாகச் சிதம்பரம் சாலை தெரிந்தது. அதிலே அநேகம் பேர் தலைகால் தெரியாமல் ஓடிக் கொண்டிருந்த காட்சி புலப்பட்டது.

அந்தக் கூட்டத்தின் நடுவே, அம்பாரி வைத்த பெரிய யானை ஒன்று அதிவிரைவாக நடந்து சென்றது. அதைச் சூழ்ந்து ஏழெட்டுக் குதிரைகளும் சென்றன. குதிரைகள் மேல் ஆயுத பாணிகளான ஆட்கள் இருந்தார்கள். அதே கூட்டத்தில் ஒரு புறத்தில் உயரமான கொடிமரம் ஒன்றைத்தூக்கிக் கொண்டு ஓடியசிலர் காணப்பட்டார்கள். அந்தக் கொடி தாறுமாறாய்க் கிழிந்திருந்தது.

அதற்குப் பிறகு அன்றிரவெல்லாம் பத்துப் பத்துப் பேராகவும், ஐம்பது நூறு பேராகவும், அதற்கு மேற்பட்ட கூட்டமாகவும் அடிக்கடி சாலையில் மனிதர்கள் தடதடவென்று ஓடிய சத்தம் கேட்டுக் கொண்டேயிருந்தது.

சிலசமயம் அசோகஸ்தம்பத்தைச் சுற்றிக் கொண்டு, புத்த விஹாரம் இருந்த பாழும் வீதி வழியாகவும் சிற்சிலகூட்டத்தார் ஓட்டமும் நடையுமாகச் சென்றதைச் சிவகாமி கவனித்தாள்.

இதையெல்லாம் பற்றிச் சிவகாமி ஆயனரைக் கேட்க, அவர், "எங்கேயோ யுத்தம் நடந்திருக்கிறது. அம்மா!

கல்கி, கோகுலம், மங்கையர் மலர் அலுவலகத்தின் மாற்றப்பட்ட புதிய தொலைபேசி எண்கள்:

ஆசிரியர் இலாகா : 2344145
சர்க்குலேஷன் மானேஜர் : 2344190
விளம்பரம், சந்தா : 2344157
டைரக்டர் : 2341543

யுத்தத்தில் ஒரு கட்சி தோற்றுவிட்டதாகத் தெரிகிறது. தோற்றவர்கள்தான் இப்படி நிலை குலைந்து ஓடுவார்கள்'' என்றார்.

''அப்பா! தோற்றவர்கள் பகைவர்களாகத்தான் இருக்க வேண்டும். ஓடுகிறவர்களைப் பார்த்தால், பல்லவ வீரர்களாகத் தோன்றவில்லையல்லவா?'' என்றாள் சிவகாமி.

''நாம் என்னத்தை அம்மா கண்டோம்? இருட்டிலே என்ன தெரிகிறது! மாமல்லர் படைத்தலைமை வகித்த கட்சி ஜெயித்திருக்க வேண்டுமென்றுதான் நானும் கருதுகிறேன்'' என்றார் ஆயனர்.

இவ்வளவு தடபுடலும் இரவு முடிந்து, பொழுது விடிவதற்குள்ளாக நின்றுவிட்டது. சூரியோதயத்துக்குப் பிறகு சத்தம், சந்தடி, ஓட்டம் ஒன்றுமேயில்லை.

சிவகாமி புத்த விஹாரத்தின் வாசலில் நின்று சாலையை நோக்கிய வண்ணம் இருந்தாள். யாராவது அந்தப் பக்கம் வரமாட்டார்களா? வந்தால் நேற்று இரவு நிகழ்ச்சிகளைப் பற்றி அவர்களிடம் விசாரிக்கலாமே என்று காத்திருந்தாள்.

சூரியன் உதயமாகி, ஒரு ஜாமம் இருக்கும், சாலையிலிருந்து குடி கொண்டிருந்த நிசப்தம் சட்டென்று கலைந்தது.

சாலையோடு குதிரைகள் பாய்ந்து வரும் சத்தம் கேட்டது.

அடுத்தாற்போல் குதிரைகளும் காணப்பட்டன. அப்பப்பா! எவ்வளவு குதிரைகள்? பத்து ஐம்பது, நூறு, ஆயிரம் கூட இருக்கும் போலிருக்கிறதே? அவ்வளவு குதிரைகள் மீதும் வேலும் வாளும் பிடித்த வீரர்கள் எவ்வளவு உற்சாகமாக அமர்ந்திருக்கிறார்கள்? அந்தக் குதிரைப் படையின் மத்தியில் ஒரு கம்பீரமான கருநிறக் குதிரையின் மேல் ஒரு வீரன் ரிஷபக் கொடியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருப்பதைக் கண்டதும், சிவகாமியின் உள்ளமும் தோள்களும் பூரித்தன. அவள் நினைத்த படியே பகைவர்கள் தான் தோற்று ஓடுகிறார்கள் என்றும் பல்லவ சைனியந்தான் ஓடும் பகைவர்களைத் தொடர்ந்து செல்கிறதென்றும் தீர்மானித்துக் கொண்டாள்.

அந்தப் பெரிய குதிரைப்படை சாலையோடு போய்ச் சற்று நேரத்துக்கெல்லாம் இரண்டு தனிக் குதிரைகளும், அவற்றின் பின்னால் ஒரு ரதமும் விரைந்து வருவது காணப்பட்டது. இதென்ன விந்தை? அந்த இரு குதிரைகளும் ரதமும் சாலையிலிருந்து குறுக்கே திரும்பி, அசோக ஸ்தம்பத்தையும் சிவகாமி இருந்த புத்த விஹாரத்தையும் நோக்கி வருகின்றனவே? குறுக்கு வழியாக அந்தத் தெருவில் புகுந்து சென்று, சாலை ஏறி, முன்னால் போன குதிரைப் படையைப் பிடிப்பதற்காக இவர்கள் இப்படி வருகிறார்கள் போலிருக்கிறது!

ஆஹா! அந்த முதல் குதிரைமேல் வருகிறது யார்? தன்கண்கள் காண்பது உண்மையா?—சிவகாமியின் இருதயம் அப்படியே நின்றுவிடும் போலிருந்தது!

ஆம்; அதன்மேல் வந்தவர் மாமல்ல நரசிம்மர் தான்!

விஹாரத்தின் வாசலில் நின்ற சிவகாமி, திடீரென்று மாமல்லரைக் குதிரை மீது பார்த்ததும், எங்கிருந்தோ, எதனாலோ அவளுடைய கண்களில் கண்ணீர் வந்து நிறைந்து விட்டது. உணர்ச்சி மிகுதியினாலும், காரணந் தெரியாத நாணத்தினாலும், சிவகாமி சட்டென்று திரும்பி, உள்ளே போவதற்குக் காலை எடுத்து வைத்தாள்.

அதே சமயத்தில் 'ஆ!' என்ற குரல் ஒலியும், வேகமாக வந்த குதிரையைத் திடீரென்று இழுத்துப் பிடித்து, அது தட் தட் என்று கால்களைத் தட்டிக் கொண்டு நிற்கும் சத்தமும் கேட்டன.

சிவகாமி வீதிப் பக்கம் திரும்பிப் பார்த்தாள்.

மாமல்லருடைய கண்கள் தீவிரமான நோக்குடன் அவளுடைய நெஞ்சையே ஊடுருவது போல் பார்த்தன. அந்தப் பார்வையில் சொல்ல முடியாத வியப்பும் மகிழ்ச்சியும் அளவிடக் கூடாத அன்பும் ஆத்திரமும் கலந்திருந்தன.

இதெல்லாம் ஒரே கணந்தான்; மறு கணத்தில் குதிரை மீண்டும் காற்றாய்ப் பறந்து சென்றது.

மாமல்லருக்குப் பின்னால் வந்த தளபதி பரஞ்சோதியும் சிவகாமியைப் பார்த்த போதிலும் அவருடைய குதிரை ஒரு கணமும் நிற்காமல் மேலே சென்றது.

அவர்களுக்குப் பின்னால் வந்த ரதத்தைக் கண்ணபிரான்தான் ஓட்டி வருகிறான் என்று தெரிந்ததும் சிவகாமி மீண்டும் வாசற் புறத்துத் தூணண்டை வந்து நின்று, ரதத்தை நிறுத்தும் படி கையினால் சமிக்ஞையும் செய்தாள்!

கண்ணபிரான் குதிரைகளை இழுத்துப் பிடித்து ரதத்தை நிறுத்தினான். குதிரைகள் திடீரென்று நின்றபடியால், அச்சு முறிவது போன்ற சடசட சத்தத்துடன் 'தடக்' என்று நின்றது.

(தொடரும்)

நேயர்களின் நியாயமான கேள்விகளுக்குக் கூட ரப்பர் மாதிரி இழுத்துக் கடைசியில் கேள்வி கேட்டவர்களையே குழப்பி விடுகிற நமது தொலைக்காட்சியினரின் சாமர்த்தியம், நமது அரசியல்வாதிகளுக்குக் கூட வராது. தொலைக்காட்சியினர் மனம் வைத்தால் நேயர்களை இன்னமும் கூடக் குழப்பியடிக்க முடியும். இருந்தாலும் தன்னடக்கம் கருதிப் பேசாமல் இருக்கிறார்களே என்பதுதான் பல நேயர்களின் குறையாக இருக்கிறது. அந்தக் குறையைத்தான் நாம் இங்கே தீர்த்து வைக்க முயற்சி செய்திருக்கிறோம்...

கடிதம் வாசிப்பவர்: 'சென்ற வாரம் மனைமாட்சி நிகழ்ச்சியில், பெண் குழந்தைக்கான கவுன் தைப்பது எப்படி என்று சொல்லிக் கொடுத்த விதம் அருமை. இருப்பினும் சொல்லிக் கொடுக்க வந்த பெண்மணி கவுன் தைப்பதற்கான துணியை எடுத்துக் காட்டியதையும் கத்திரிக்கோலைக் கையால் பிடித்ததையும் பிறகு கடகடவென்று தையல் மெஷினில் தைத்ததையும்தான் காட்டினீர்களே தவிர, துணியை எந்த மாதிரியான டிசைனில் கத்திரிக்கோலால் வெட்டுவது என்பதைக் காட்டவேயில்லை. அப்படிக் காட்டியிருந்தால் என்போன்ற பெண்கள் அதைக் கற்றுக் கொள்ள வசதியாய் இருந்திருக்குமே என்பதுதான் ஒரு சிறு குறையாகப் போய் விட்டது' என்று எழுதியிருக்கிறார்கள் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த கலாவும் கல்பனாவும்.

தயாரிப்பாளரின் பதில்: கவுன் தைப்பதற்கு முதலில் என்ன தேவை? துணி. அதை வெட்டுவதற்குக் கத்திரிக்கோல். வெட்டியதைத் தைப்பதற்குத் தையல் மெஷின். இந்த மூன்றும்தான் அடிப்படைத் தேவை. இவற்றில் ஏதாவது ஒன்று இல்லாமல்



# இந்த வாரடீ.வி.சினிமா!

போனால் கூடக் கவுன் தைப்பது சாத்தியமில்லாமல் போய் விடும் வாய்ப்பிருக்கிறது என்கிற அடிப்படை விஷயத்தைத்தான் நாங்கள் அந்த நிகழ்ச்சியில் நேயர்களுக்கு வலியுறுத்தினோம். எப்படியெல்லாம் துணியை வெட்ட வேண்டும் என்பது போன்ற சிறு சிறு விஷயங்களையெல்லாம் காட்டியிருந்தால் அடிப்படையான விஷயங்களைக் கடைசி வரை காட்ட முடியாமலே போயிருக்கும் என்பது மட்டுமல்ல, நிகழ்ச்சியும் சுவாரஸ்யமில்லாமல் போயிருக்கக் கூடும். எனவே, சுவாரஸ்யம் குறைந்து போய் விடக் கூடாது என்கிற காரணத்திற்காகத்தான் அதைக் காட்டவில்லையே தவிர, மற்றபடி காட்டக் கூடாது என்பதற்காக அல்ல!

க. வாசிப்பவர்: 'செவ்வாயன்று மாலை ஒளி பரப்பிய நாடகத்தின் மூலம் என்ன




கருத்தைச் சொல்ல வந்தீர்கள் என்பதுதான் எங்களுக்குக் கடைசி வரை புரியவில்லையே தவிர, மற்றபடி நாடகம் ரியலி சூப்பர்ப்!' என்று எழுதியிருக்கிறார் சூளைமேட்டிலிருந்து சூரியகாந்தன்.

த. பதில்: நாடகத்தில் சொல்ல வந்த கருத்தைப் பளிச்சென்று வெளிப்படையாகச் சொல்லுவது ஒருமுறை. சொல்ல வந்த கருத்தை வெளிப்படையாக அல்லாமல் கடைசி வரை 'அண்டர்கரண்ட்'டாகவே சொல்லுவது இன்னொரு முறை. இந்த இரண்டு முறைகளும்தான் பண்டைக் காலத்திலிருந்து கையாளப்பட்டு வருகின்றன. ஆனால் நாங்கள் இப்போது மூன்றாவது முறையை அறிமுகப்படுத்தியிருக்கிறோம். அதாவது ஏதோவொரு கருத்து இருந்து. அது நமக்குப் புரியாமல் போய் விடப்




போகிறது என்று பார்ப்பவர்கள் மனத்தில் கடைசி வரை ஒரு எதிர்பார்ப்பை மட்டுமே ஏற்படுத்துவதுதான் மூன்றாவது வகை. நேயர் எழுதியிருப்பதைப் பார்த்தால் அந்த நாடகம் மூன்றாவது வகையில் சேரும் போல் தெரிகிறது. எப்படியாயினும் அந்த நாடகத்தில், கருத்தில்லாத ஒரு கருத்து இருப்பதைச் சுட்டிக்காட்டிய நேயருக்கு நன்றி.

க. வாசிப்பவர்: சென்னைத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளெல்லாம் வர வர ஸ்டீரியோ டைப்பாகி வருகின்றன என்கிற ஒரேயொரு குறையைத் தவிர, மற்றபடி 'டீப் இட் அப்' என்றே பாராட்டத் தோன்றுகிறது.

த. பதில்: பாராட்டுக்கு நன்றி. ஆயினும் ஸ்டீரியோ டைப் என்று நேயர் குறிப்பிடுவதை ஒப்புக் கொள்ள முடியாது. உதாரணமாகச் செய்திகளையே எடுத்துக் கொள்ளுங்கள். ஒரே செய்தியைத் தினந்தோறும் வாசித்து நேயர்களைப் போரடிக்கக் கூடாது என்பதை, நமது தொலைக்காட்சி நிலையம் ஒரு கடுமையான விதிமுறையாகவே வைத்திருக்கிறது. அதனால்தான் தினந்தோறும் புது புதுச் செய்திகளைத் தேடிக் கண்டு பிடித்து வாசிக்கிறோம். இதையெல்லாம் அந்த நேயர் கவனிக்காமல் போனதுதான் ஆச்சரியமாக இருக்கிறது! இன்னும் ஏராளமான கடிதங்கள் இருந்தாலும் நேரமின்மை காரணமாக இத்துடன் முடித்துக் கொள்கிறோம். வணக்கம்.

க. வாசிப்பவர்: இந்த வாரம் ஒளிபரப்பாகப் போகும் திரைப்படம் பற்றி நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லையே! மறந்து விட்டீர்களா?

த. பதில்: நிச்சயமாக நான் மறக்கவில்லை. பெரும்பாலும் நாம் ஒளிபரப்பப் போகும் படத்தின் பிரிண்ட் நமது கைக்குக் கிடைக்காமல்தான் இழுபறியாக இருக்கும். ஆனால் இந்த வாரம் படத்தின் பிரிண்ட் நமக்கு முன்கூட்டியே கிடைத்து விட்டிருந்தாலுங்கூட அத்தனை ரீல்களும் ரொம்பவும் நைந்து போய்த் துண்டு துண்டாகச் சிதறிக் கிடப்பதால், ஆரம்பத்தில் வரும் டைட்டில் கார்டுகள் அடங்கிய ஃபிலிமைக் கண்டு பிடிப்பதே சிரமமாக இருக்கிறது. இருப்பினும் மனம் தளராமல் நமது நிலையத்தைச் சேர்ந்தவர்கள் தேடிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அது கைக்குக் கிடைத்ததும் உடனடியாக அறிவிப்போம். தாமதப்படுத்தி விடுவோமோ என்று யாரும் சந்தேகப்பட வேண்டிய அவசியமே இல்லை. நன்றி. வணக்கம்.

கற்பனை: சார்ல்ஸ்

# ஒரேயொரு கணம்

தலை உயர்த்திப் பார்த்தாக வேண்டிய தேவை இன்றியே, சேதுமணி தன்னைக் குறுகுறுவென்று பார்த்துக் கொண்டிருந்ததை ரவியால் உணர முடிந்தது. கவர்ச்சியான தன் தோற்றத்துக்குப் பெண்கள் சட்டென்று அடிமைப்படுவது பற்றிய செருக்கு, ஏற்கெனவே அவனுக்கு உண்டு. இருந்தாலும், மணமான பெண்கள் சட்டென்று பார்வையை அகற்றிக் கொண்டு விடும் போது, மணமாகாத இளம் பெண்கள் சற்று அதிக நேரம் அதற்கு எடுத்துக் கொள்ளுவதை அவன் கவனித்து வந்துள்ளான்.

'வாசல் பக்கத்துல போய் நிக்காதீங்கோ. எதிர் வீட்டுப் பொண்ணு அவ வீட்டு வாசல்ல நின்னுண்டிருக்கா.' என்று எத்தனையோ தடவை அவன் மனைவி தயா அவனை எச்சரித்திருக்கிறாள். சிரிப்புத் தான் வரும்.

இதெல்லாம் ரவிக்கு அந்தக் கணத்தில் வரிசையாக ஞாபகம் வந்தன. அவன் தலையை உயர்த்திய போது, சேதுமணி கணத்துக்கும் குறைவான நேரத்துள் தன் முகத்தைத் தாழ்த்திக் கொண்டு விட்டாள்.

அவன் மனைவி தயாவை அழகி என்று சொல்ல முடியாது. சுமாராயிருப்பாள். பத்து ஆண்டுகளுக்கு முன்னால் அவர்களுக்குத் திருமணம் ஆன போது இள வயதின் காரணத்தால் சற்றே அழகாய்த் தோன்றிய தயா, இப்போது மெலிந்து, வாடி, இருந்த கொஞ்ச நஞ்ச அழகும் குன்றிப் போய் விட்டாள். மூன்று பிள்ளைப் பேறுகள், தானாக விளைந்த சிதைவுகள், செய்து கொண்ட சிதைவுகள் ஆகியவை அதற்கு அதிகப்படியான காரணங்களாக இருக்கலாம்...

அடுத்த வாக்கியத்தை மொழியாமல் ரவி அவளைப் பார்த்தபடி உட்கார்ந்து கொண்டிருந்தான். தலையை மீண்டும் உயர்த்திய, சேதுமணியின் முகத்தில் சின்னதாய் ஒரு சிரிப்பும் சிவப்பும் ஒருசேரத் தோன்றின. அவனது அழகைத் தான் ரசித்தது போன்றே அவனும் தன்னை ரசித்துக் கொண்டிருக்கிறான் என்பதைப் புரிந்து கொண்டதால் விளைந்த அற்ப மகிழ்ச்சியே அதற்குக் காரணம்.

அவன் இடுக்கிட்டவன் போல் அவள் முகத்தில் தேங்கிய தன் விழிகளை விரைவாக அகற்றிக் கொண்டான். கொஞ்ச நாட்களாகவே அவனது பார்வையில் தெறித்த வித்தியாசமான ஒன்று அவளைப் படுத்திக் கொண்டிருந்தது. அவள் தன்பால் ஈர்க்கப் பட்டிருப்பதாய் அவன் அந்த வித்தியாசத்துக்குப் பொருள் கற்பித்துக் கொண்டிருந்தான்.

அவன் தொண்டையைச் செருமிக் கொண்டு அடுத்த வாக்கியத்தைச் சொல்லத் தொடங்கினான். தொடங்கிய போது தொலைபேசி மணியடிக்க, ஒலிவாங்கியை எடுத்துக் காதில் பொருத்தி, ''ஹலோ...'' என்றான். அவன் மனைவி தயாதான்.

''நான்தான் பேசறேன், தயா. டிக்டேஷன் கொடுத்திண்டிருக்கேன். மருந்துதானே? வாங்கிண்டு வர்றேன்... மறக்க மாட்டேன்...'' என்று கூறி விட்டு இணைப்பைத் துண்டித்தான். அவன் பேசியதைக் காதில் வாங்காதவள் மாதிரி சேதுமணி நோட்டுப் புத்தகத்தில் பென்சிலால் கிறுக்கிக் கொண்டிருந்தாள்.

அவன் வாய்மொழிக் கடிதத்தைத் தொடர்ந்தான். கடிதத்தை முடித்தபின், இன்றைய அவளது பார்வையின் கூர்மையால் அதிகப்படியான துணிச்சலைப் பெற்று, ''என்ன, சேது உங்க விஷயம் என்ன?'' என்றான்.

அவனது கேள்வி மொட்டையாக இருந்தாலும் அவன் என்ன கேட்டான் என்பது அவளுக்குப் புரியவே செய்தது. இருந்தாலும், ''எதைப் பத்தி, சார், கேக்கறீங்க?'' என்றாள்.

அவன் இலேசாகச் சிரித்தான். சில நொடிகளை மவுனத்தில் கழித்த பிறகு சொன்னான். ''உங்களுக்கு அப்பாம்மா இருக்காங்கல்ல?''

''இருக்காங்க'' — அந்த ஒற்றைச் சொல் 'இருந்து என்ன பிரயோசனம்?' என்ற ஆற்றாமை தொனிக்கப் பிறிட்டதாய் அவனுக்குப் பட்டது.

''உங்கப்பா என்ன பண்ணிட்டிருக்கார்?''

''எங்கப்பா ரிடையராகி ரெண்டு வருஷம் ஆயிடுத்து, சார். நான்தான் மூத்தவள். என் தம்பியும் ரெண்டு தங்கைகளும் படிச்சிட்டிருக்காங்க. என் சம்பாத்தியத்தை நம்பித் தான் எங்க குடும்பமே இருக்கு...''

அவள் மேற்கொண்டு பேச வாய் திறந்த கணத்தில் அறைக் கதவு திறந்தது. பியூன் தம்புசாமி, ''ராமநாதன் சார் வந்திருக்கார், சார். உள்ளே வரச் சொல்லட்டுமா?'' என்று பாதிக் கதவு திறந்த நிலையில் வாயிலில் நின்று கொண்டே வினவினான்.

''அடடே. வந்து ரொம்ப நேரமாச்சா? வரச் சொல்லுப்பா.''

''இல்லே, சார். இப்பத்தான் வந்தாரு. ஸ்டெனோம்மா ரூம்ல உக்காரச் சொன்னேன்.''

''சரி, சேது. அப்புறம் பேசலாம்...'' என்று நட்புணர்வு ததும்பிய விழிகளை அவள் மீது பதித்தபடி அவன் கூற, அவள் எழுந்து கொண்டாள். அவள் வெளியேறிய

ஜோதிர்லதா கிரிஜா



அடுத்த நொடியில் ராமநாதன் புன்சிரிப்புடன் அறைக்குள் நுழைந்து ரவிக்கு எதிரே அமர்ந்தான்.

''வாப்பா, என்ன சாப்பிட்றே? காப்பியா, டீயா, இல்லே கூல்ட்ரிங்க்கா?'' என்று உபசரித்தவாறு மணியடித்தான் ரவி.

''மனசு ஒரே கொதிப்பா இருக்குப்பா, ரவி. ஐஸ் போட்டு லைம் வாங்கிண்டு வரச் சொல்லு...''

பியூன் வந்து, அவனிடம் காசு கொடுத்து அனுப்பிய பின், ''என்ன விஷயம், ராமு?'' என்று கேட்ட ரவி வியப்புடன் நண்பனைப் பார்த்தான்.

''அதை ஏன் கேக்கறே? நான் சின்ன வீடு வச்சிருக்குறது என் ஒய்ஃபுக்கு எப்படியோ தெரிஞ்சு போயிடுச்சு. நேத்து ஒரே ரகளை...''

''எப்படித் தெரிஞ்சது அவங்களுக்கு?''

''எப்படிக் கண்டுபிடிச்சான்னே தெரியல்லே. சொல்ல மாட்டேங்கறா. ஆனா சின்ன வீட்டு அட்ரெஸ் முதற்கொண்டு கரெக்டாச் சொல்றாப்பான்னா?''

''நீ என்ன சொல்லிச் சமாளிச்சே?''

''அது ஒரு பிராஞ்ச் ஆபீஸ்னு சொன்னேன். கான்பிடென்ஷியல் மீட்டிங் நடத்தறதுக்குன்னு இருக்கிற கட்டடம்னும் சொன்னேன். நம்பினாத்தானே? மீட்டிங் நடக்கிறப்ப சில ஆபீசர்கள், ஸ்டெனோ, ஹெட்க்ளார்க்ஸ் இவங்க மட்டும் அங்கே போவோம்னு சொல்லிப் பார்த்தேன். நம்பணுமே துளியாவது? ஊகூம்...''

''அப்ப என்ன பண்றதா இருக்கே?''

''அதான் ஒண்ணும் புரியல்லே. சரியான ரகளை பண்ணி விட்டுட்டா நேத்து. வியாதிக்காரப் பொண்டாட்டியை வச்சுக்கிட்டு நீ எப்படியோ கட்டுப்பாடா இருக்கே. என்னால முடியல்லேப்பா...''

தன் மனமும் கொஞ்ச நாட்களாக அலை பாய்ந்து கொண்டிருப்பதையும், சேதுமணியின் கலக்கம் நிறைந்த பார்வை, தனக்கு மயக்கந் தந்து கொண்டிருப்பதையும் அப்போதைக்கு நண்பனிடம் தெரிவிக்க அவன் விரும்பவில்லை. சேதுமணியின் கருத்து பற்றித் திட்டவட்டமாகத் தெரிந்து கொண்ட பிறகே அது பற்றி அவனிடம் யோசனை கேட்க வேண்டும் என்று ரவி தனக்குள் எண்ணிக் கொண்டான்.

''நேத்தெல்லாம் அவ கத்து கத்துன்னு கத்தினப்ப எனக்குப் பயம் ஏற்பட்டதென்னவோ உண்மைதான். ஆனா, இன்னைக்குக் காலையில, 'அது அப்படித்தான்டி. என்னிஷ்டம்' அப்படின்னு தைரியமாச் சொல்லிட்டேன்.''

''என்ன சொன்னாங்க அதுக்கு?''

''என்னத்தைச் சொல்றது? ஒன்னு ஊரு கூடற மாதிரி அழுதா. வாயைப் பொத்தி ரெண்டு சாத்துச் சாத்தினேன். அம்மா வீட்டுக்குப் போகப் போறாளாம். போகட்டுமே...?''

ரவி பதில் சொல்லவில்லை. சேதுமணியின் வாயைச் சீண்டிப் பார்த்து, அவளது பார்வையின் பொருள் தான் நினைப்பதுவாக இருப்பின், தனியாக ஒரு குடித்தனம்



போட வேண்டியதுதான் என்று நினைத்துக் கொண்டான். விளைவுகள் வரும் போது சந்திக்க வேண்டியதுதான்...

சற்று நேரம் பேசிக் கொண்டிருந்த பின் ராமநாதன் புறப்பட்டான். இதற்குள் மணி ஐந்து அடித்திருக்கவே, ரவியும் நடையைக் கட்டினான். சேதுமணியின் அறையைக் கடந்து சென்ற போது சந்தித்துக் கொண்ட இருவர் பார்வைகளிலும் வழக்கத்தைக் காட்டிலும் அதிக அர்த்தமும் ஆழமும் இருந்தது போல் இருந்தது!

**வீ**ட்டுக்குள் அவன் நுழைந்த போது மூத்த மகன் – பத்து வயது ரமணி – ஆவலுடன் ஓடி வந்தான். ''என்னப்பா வாங்கிட்டு வந்தே இன்னிக்கு?''

''காரம் பக்கோடா வாங்கிண்டு வந்தேண்டா...''

அவன் தருவதற்கு முன்னால் பையைத் திறந்து ஒரு பொட்டலத்தை எடுத்துப் பிரிக்கத் தொடங்கிய ரமணி, ''பாலாவுடையதை அம்மாகிட்டே கொடுத்து வையுங்கப்பா. அவன் வெளையாடப் போயிருக்கான்,'' என்றான். பாலாவுக்கு ஒன்பது வயது.

''உங்கம்மா எங்கேடா?''

''அடுப்படியில இருக்காங்க.''

காலணிகளைக் கழற்றி விட்டு அவன் உள்ளே சென்றான். தயா, சமையல் செய்து கொண்டிருந்தவள், இரும்பிப் பார்த்து, ''இதோ, ஒரே நிமிஷத்துல காப்பி எடுத்துண்டு வரேன்...'' என்று குரல் கொடுத்தாள். அவன் தலையசைத்துக் கொண்டே குளியலறைக்குள் புகுந்தான். குளியலறையின் தனிமையில் முகங் கழுவிக் கொண்டே சேதுமணியைப் பற்றிய யோசனையில் ஆழ்ந்தான். ராமநாதனுக்கு இருக்கும் துணிச்சல் தனக்கு இருக்குமா என்ற கேள்வி எழுந்தபோதிலும், எப்படியாவது அதை வரவழைத்துக் கொள்ள வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்தான். 'எப்படியோ என் காட்டில் மழை' என்று சொல்லிப் புன்னகை புரிந்து கொண்டே குளியலறையை விட்டு வெளியே வந்தான். அந்தக் கணத்தில் கையில் கடச்கடக் காப்பியுடன் சமையலறையை விட்டு வெளிப்பட்ட தயா, தன் முகத்துப் புன்சிரிப்பைப் பார்த்துவிடாதிருக்கும் பொருட்டு, முகத்தைத் துண்டால் துடைக்கும் பாவனையில் அதை மறைத்துக் கொண்டான். 'நாளைக்கு விட்ட இடத்திலிருந்து சேதுமணியுடன் பேச்சைத் தொடர வேண்டும்' என்று சொல்லிக் கொண்டான்.

சாப்பாட்டு மேசை மீது காப்பிக் கோப்பையை வைத்து விட்டு அவனை நோக்கித் திரும்பிய தயா, ''என்ன விசேஷம்?'' என்றாள் அதில் சாய்ந்து நின்றவாறு.

அவன் கண்கள் மலர, ஒரு திடுக்கிடலுடன் அவளைப் பார்த்தான்.

''என்ன விசேஷமா? ஒரு விசேஷமும் இல்லியே? எதை வெச்சு அப்படிக் கேக்கறே?'' என்றான் வியப்புடன். உதடுகளை மறைத்துக் கொண்டாலும் விழிகளைப் படித்து விடுகிற கெட்டிக்காரத்தனம் அவளுக்கு இருந்ததைக் கண்ட வியப்பு அது என்பதைப் புரிந்து கொள்ளாமல், ''என்னமோ விஷயம் இருந்தே ஆகணும். நீங்க நுழையறச்சயே கவனிச்சேன். உங்க நடையிலேயே ஒரு வேகம் இருந்தது. ஏதாவது ப்ரொமோஷனா? சர்ப்ரைஸா எங்கிட்ட சொல்லணும்னு இருந்தேளா?'' என்றாள் தயா சிரிப்புடன்.

''நீதான் கெட்டிக்காரியாச்சே? எப்படியோ கண்டுபிடிச்சுடறே. கிட்டத்தட்ட அது மாதிரிதான்னு வச்சுக்கோயேன். அடுத்த ப்ரொமோஷன் லிஸ்ட்ல எம் பேரு ரெண்டாவதா இருக்கு...'' என்று அவன் அப்போதைக்குப் புளுகினான்.

''உங்க சந்தோஷத்துல ஒரு முக்கியமான விஷயத்தை மறந்துடாதீங்கோ...''

''என்ன?''

''உங்கம்மா திவசம் வர்ற நவமி திதியில வருது. வாத்தியாருக்குச் சொல்லி வைக்கணும். அப்புறம் கரெக்டா நாள் இன்னதுன்னு தெரிஞ்சுண்டு அன்னிக்கு நீங்க லீவ் போடணும்...''

அவனுள் சொடேரென்று உச்சி முதல் உள்ளங்கால் வரை இன்னதென்று விளக்க முடியாத ஓர் உணர்ச்சி பரவியது. வாயில் ஊற்றிக் கொண்ட காப்பியின் கசப்புடன் செத்துப் போன அம்மா பற்றிய நினைவுகள் கிளர்த்த ஞாபகங்களும் கலந்து கொண்டு கசப்பை அதிகமாக்கின.

அவன் அம்மா மீது அவன் உயிரையே வைத்திருந்த சேதி அவளுக்குத் தெரியும். அவர்களுக்குத் திருமணம் ஆன போது அவன் அம்மா உயிருடன் இல்லை. அம்மாவைப் பற்றியும் அவள் பட்ட துன்பங்களைப் பற்றியும் பேசத் தொடங்கி விட்டால் எதிராளி போதும் போதும் என்று சொல்ல முடியாமல் முதுகை நெளித்து அறிவுறுத்துகிற வரையில் சொல்லிக் கொண்டே இருக்கக்கூடிய அளவுக்கு அவன் தன் அம்மாவின் மீது அன்பு கொண்டிருந்தான்.

அவனது வெறித்த பார்வையால் சற்றே துணுக்குற்ற தயா, ''ஐ' ஆம் ஸாரி. நீங்க

**அரசியல்வாதி 1: மத்த கட்சிக்காரங்களை விட நம்ம தலைவர் ஒரு படி மேலேயே போயிட்டார்!**

**அரசியல்வாதி 2: எப்படிச் சொல்றீங்க?**

**அரசியல்வாதி 1: நம்ம கட்சியோட கொள்கை ராம், ரஹீம், ராபர்ட், ராகுல்சிங், ரொட்டி'ன்னு சொல்லி இருக்காரே!**

**— எஸ். முகம்மது யூசுப்.**



''இண்டர்வியூல ரெண்டு கேள்வி தான் கேட்டாங்க... ஆனா நேரடியாக் கேட்டாங்க.''

''அப்படி என்ன கேட்டாங்க?''

''லஞ்சம் தர முடியுமா? எவ்வளவு?''

— சீர்காழி வி. ரேவதி.



காப்பி குடிச்சு முடிச்சதும் சொல்லி இருக்கணும்,'' என்றவள், ''அப்புறம் இன்னொரு விஷயம் உங்ககிட்டே சொல்லணுமே?''

''என்ன, தயா?''

''இன்னிக்கு வழக்கமான செக்—அப்புக்காக டாக்டர்கிட்டே போயிருந்தேன். முன்னைக்கு இப்ப என் உடம்பு எவ்வளவோ தேறி இருக்குன்னு சொன்னா. கொடைக்கானல்லயோ, ஊட்டியிலயோ ஒரு பத்து நாள் இருந்துட்டு வரச் சொன்னா...''

''அப்படியா? இப்ப எனக்கு லீவ் கிடைக்காது... பாக்கலாம்.''

''அம்மா சம்மர் ஹாலிடேஸப்ப போலாம்மா. என்னால உன்னை விட்டுட்டு இருக்க முடியாது...'' என்றான் குழந்தை ரமணி கெஞ்சுதலாக.

''என்னால உன்னை விட்டுட்டு இருக்க முடியாது' — இந்தச் சொற்கள் ஒரு சவுக்கடி மாதிரி ரவியின் நெஞ்சின் மீது வந்து விழுந்தன. அவனுக்குப் பன்னிரண்டாவது பிறந்த நாளன்று தான் அவன் அம்மா செத்துப் போனாள். அந்த நாள் அவன் மறக்கக்கூடிய நாளே இல்லை. ஏனெனில், அவன் அம்மாவின் சாவு பிற அம்மாக்களின் சாவைப் போன்று சாதாரணமாக நேர்ந்த ஒன்றில்லை... தன் ஒரே மகன் — தன் மீது பாச மழையைப் பொழியும் மகன் — தான் இல்லாது போயின் உடைந்து போவானே, அனாதையாகிப் போவானே என்ற தாய்மைக்குரிய இயல்பான கேள்விகளைக் கூடத் தனக்குள் கேட்டுக் கொள்ளாமல் அவள் செத்துப் போனாள். மகனைப் பற்றிய ஞாபகத்தைக் கூட ஒரு கணவனின் கொடுமை அழிக்கக் கூடியதா என்று அவன் அடிக்கடி நினைப்பதுண்டு....

பழைய நினைவுகள் கிளர்த்திய உணர்ச்சிப்பெருக்கில் ரவி ஒரு முடிவுக்கு வந்தான்.

''உன் தம்பி ரகுவுக்கு இப்ப என்ன வயசாறது?''

''முப்பது ஆகப் போறது'' என்று பதிலளித்த தயா, அவன் உரையாடலோடு தொடர்பற்ற தினுசில் கேட்ட கேள்வியைப் பற்றிய வியப்புடன் அவனை நோக்கினாள்.

''அவனுக்குக் கல்யாணம் பண்ண வேண்டாமா?''

''பண்ணணும். நானே எந்தப் பொண்ணைப் பார்த்து ஏற்பாடு செஞ்சாலும் பண்ணிக்க ரெடின்னு சொல்லிட்டானே! நானும் அக்கம் பக்கத்துல விசாரிச்சுண்டு தான் இருக்கேன்...''

''எங்க ஆபீஸ்லயே ஒரு பொண்ணு இருக்கா. நடுத்தரக் குடும்பம். வேற யாருமில்லே. என்னோட ஸ்டெனோதான். சேதுமணின்னு பேரு...''

''சொல்லி இருக்கேன்.''

''ஜாதகம் கீதகம், மண்ணாங்கட்டின்னு எதுவும் பார்க்க வேண்டாம். ரெண்டு பேருக்கும் ஒருத்தரை ஒருத்தர் பிடிச்சுடுத்துன்னா ஏற்பாடு பண்ணிடலாம். ஆனா, அவா வீட்ல ஒண்ணும் செய்ய மாட்டா. ரொம்ப நடுத்தரம். நடுத்தரத்துக்கும் கீழே.''

''அதனால என்ன? நாமே செலவழிச்சுச் செஞ்சாப் போச்சு. நீங்க வரதட்சிணை வாங்காம என்னைப் பண்ணிக்கலையா என்ன...? எதுக்கும் அந்தப் பொண்ணை ஒரு நாள் நம்மாத்துக்குக் கூட்டிண்டு வாங்கோ.. விஷயம் இன்னதுன்னெல்லாம் சொல்ல வேண்டாம் இப்பவே. அப்புறம் அவளை அவனுக்குப் பிடிக்காம போயிடுத்துன்னா கஷ்டப்படும் அவ மனசு...''

ரவி சிரித்தான். ''அவ ரொம்ப அழகான பொண்ணு, தயா. அவளைப் பிடிக்கலைன்னு எவனும் சொல்ல மாட்டான். ரகுவும் நன்னாத்தானே இருக்கான் பார்க்கிறதுக்கு...?''

''அப்ப, கட்டாயம் அவளைக் கூட்டிண்டு வாங்கோ. நம்ம கார்லேயே ஆபீஸ் முடிஞ்சதும் கூட்டிண்டு வந்துடுங்கோ. யாரானும் ஏதானும் சொல்லுவான்னு அவளைத் தனியா பஸ்ல வரச் சொல்லி அலைக்கழிக்காதீங்கோ...'' என்றபடி காப்பிக் கோப்பையை எடுக்கக் குனிந்த அவளது முகத்தை அவன் ஒரு புதிய ஆர்வத்தோடு பார்த்தான். தன் மீது அவள் கொண்டிருந்த நம்பிக்கையை எண்ணி அவன் விழிகளில் நீர் படர்ந்தது. 'என்ன காரியம் செய்யத் திட்டமிட்டிருந்தேன்?' என்ற நினைப்பில் தலையை உதறிக் கொண்டான்.

அவன் முகத்து உணர்ச்சியும் கண்களில் பளபளத்த நீர்த் திரையும் அருகே நின்றிருந்த மகனுக்கு வித்தியாசமாகப்பட்டிருக்க வேண்டும்.

''என்னப்பா?'' என்றான்.

''என்னது, என்னப்பா? ஒண்ணுமில்லியே?'' என்றபடி அவன் ரமணியை இழுத்துத் தன்னோடு சேர்த்துக் கொண்டான். இன்னொரு பெண்ணை வீட்டுக்கே கூட்டி வந்து தன் அப்பா திமிராய்க் கொட்டம் அடித்த நாளில்தான் தன் அம்மா உத்தரத்தில் தொங்கினாள் என்ற ஞாபகம் அந்தக் கணத்தில் அவனுக்கு வந்தது.

# ஆகாசத் தாமரை

## 15

**வீ**ட்டு வாசலில் கார் நிற்பதைப் பார்த்தாள் சடகோபனின் மனைவி செங்கமலம். சம்பந்தி வீட்டுக் கார் மாதிரி இருக்கிறது. சம்பந்தி அம்மாள் வருகிறாரோ? வீடு குப்பையும் கூளமுமாக இருக்கிறது.

கோமளா வண்டியிலிருந்து இறங்கினாள். காரின் முன் பக்கத்திலிருந்து இறங்கிய வேலைக்காரன் அவளிடமிருந்து 'சூட்—கேஸை' வாங்கிக் கொண்டான்.

இவள் ஏன் தனியாக வருகிறாள்? செங்கமலத்துக்கு நெஞ்சு அடித்துக் கொண்டது. பெட்டியை உள்ளே வைத்து விட்டு விடைபெற்றுக் கொண்டான் வேலைக்காரன்.

''என்னடி இது. திடுதிப்னு?'' என்றாள் கோமளாவின் அம்மா.

அந்தச் சின்ன அறையில் போடப்பட்டிருந்த கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தாள் கோமளம். வயதாகியிருந்த கயிறு, சற்று கீழே இறங்கி, அவளை ஏற்றுக் கொண்டது.

''அப்பாடா...'' என்றாள் கோமளா புன்னகையுடன்.

''என்னடி, சொல்லாமெ கொள்ளாமெ வந்திருக்கே. என்ன விசேஷம்?''

''சும்மாத்தான்... உங்களையெல்லாம் பாத்து நாளாச்சேன்னுதான். சீதா, ஜானகி, எங்கே? பள்ளிக்கூடத்திலிருந்து இன்னும் வரல்லியா?''

''வர நேரந்தான். நீ எதுக்காகப் பெட்டியை எடுத்துண்டு வந்திருக்கே?''

''புடைவையெல்லாம் கையிலே எடுத்துண்டு எப்படி வர முடியும்? பெட்டி வேணாமா?''

''அப்படின்னா?''

''அப்படின்னா அப்படித்தான். நான் இனிமே அவாத்துக்குப் போகப் போறதில்லே.''

''என்னடி சொல்றே?''

''அதான் சொல்லிண்டிருக்கேனே...''

அப்பொழுது சடகோபன் உள்ளே நுழைந்தார்.

''அப்பொவே முட்டிண்டேன். கேட்டேளா? உங்க அருமைப் பொண்ணு ஆத்துக்கு வந்தாச்சு. இனிமே அங்கே போகப் போறதில்லையாம். நான் பயந்தபடியே ஆயிடுத்து.''

**கை**யில் சுமந்து கொண்டிருந்த இரண்டு பைகளையும் சுவரோரமாக வைக்கப் போன சடகோபன், மனைவி சொல்வதைக் கேட்டு பிரமை பிடித்தவர் போல் அப்படியே நின்று கொண்டிருந்தார்.

கோமளா எழுந்து சென்று அவரிடமிருந்து பைகளை வாங்கிச் சுவரோரமாக வைத்தாள்.

சடகோபன் கோமளாவின் சூட்—கேஸையும் அவளையும் மாறி மாறிப் பார்த்தார். சில விநாடிகள் கழித்து ''சொல்லித் தொலையேன்'' என்று சீறினார்.

''அது ஒரு ஜெயில்... எனக்குப் பேச்சுத் துணைக்கு யாருமே கிடையாது.''

''உன் ஆம்படையான்?''

''அவர் என்னோட பேசறதேயில்லே... அவரோட அம்மா வீட்டிலியே இருக்கிறதில்லே... எனக்குப் பைத்தியம் பிடிச்சுடும் போலிருந்தது.''

''சொல்லிக்காமெ வந்துட்டியா?'' என்று கேட்டாள் அவள் அம்மா.

''இல்லே, சொல்லிண்டுதான் வந்தேன். அம்மாதான் என்னை இங்கே கொண்டு விடச் சொன்னார்.''

''உன் ஆம்படையான் உன்னோட பேசறதில்லேன்னா என்ன அர்த்தம்?'' என்று கேட்டார் சடகோபன்.

''எல்லா அர்த்தத்திலியும். வெளியிலே போவார், வீட்டிலிருந்தா புஸ்தகம் படிப்பார், வீணை வாசிப்பார்... அவ்வளவுதான்.''

''உன்னை எதுக்காகக் கல்யாணம் பண்ணிண்டானாம்...?'' என்றார் சடகோபன்.

''அவருக்கே தெரியலே...''

''உனக்குச் சாமர்த்தியம் போறாது. உன் மாதிரி எவ்வளவு பொண்ணு, ஆம்படையானைக் கைக்குள்ளே போட்டுண்டு, அவ்வளவு பெரிய இரண்ட சொத்தை நிர்வகிச்சுண்டிருக்கா. தெரியுமா?'' என்றார் சடகோபன்.

''அந்தச் சொத்துக்காகத்தான் என்னை அவருக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தேள் இல்லையா?''

''நானா அவனைப் 'பண்ணிக்கோ'ன்னு கட்டாயப்படுத்தினேன்...? அவன் கேட்டான். நீயும் சரின்னே... ஆமாம், அவ்வளவு பெரிய சொத்து இருக்குன்னு சொன்னா தப்பா? காசுன்னா யாருக்குக் கசக்கும்? உனக்கப்புறம் ரெண்டு பேர் இருக்கா. இவாளுக்குக் கல்யாணம் பண்ண வேண்டாமா?'' என்றார் சடகோபன்.

''இப்போ நீ ஆத்துக்கு வந்துட்டியே, உன்னாலே இவா கல்யாணத்துக்கும் தடங்

இந்திரா பார்த்தசாரதி

கல்!'' என்றாள் செங்கமலம், கண்களில் வழிந்த நீரை முன்றானையினால் துடைத்துக் கொண்டே.

''ஒரு தடங்கலுமில்லே. நம்ம அந்தஸ்துக்குத் தகுந்தபடி...'' என்று கோமளா சொல்லி முடிப்பதற்குள், சடகோபன் கேட்டார். ''அவா போட்ட நகையெல்லாம் எடுத்துண்டு வந்துட்டியா?''

''இல்லே...''

''என்னடி இல்லே? அது உன் நகை தானே?''

''எப்படி என் நகை? அவா போட்டது. எதுக்காக நான் எடுத்துண்டு வரணும்... தப்பிச்சுண்டு வந்தாப் போறும்னு வந்திருக்கேன். நகையையும் கட்டி எடுத்துண்டு வரணுமா?''

ஏண்டி இப்படி அசட்டுப் பொண்ணாப் பொறந்திருக்கே? அந்தக் கடன்காரன் தானாகவே வந்து பண்ணிக்கிறேன்னு ஒத்தைக் கால்லே நின்னுண்டு பண்ணிண்டான். இப்போ வேண்டாம்னானா அவன் செஞ்ச துரோகத்துக்குப் பரிகாரந்தான் என்ன? நகையைக் கேக்கறதிலே என்ன தப்பு? உனக்கு வேண்டாம்னா இருந்துட்டுப் போ. உன் தங்கைக் போட்டுக்கக் கூடாதா?'' என்றார் சடகோபன்.

''எனக்கு அவாத்துச் சாமான் ஒண்ணும் வேண்டாம்னுட்டுத்தான் வந்தேன். அவா புடைவையைக் கூட எடுத்துண்டு வரலே.''

''உங்கப்பன் உனக்குச் சீதனமா வச்சிருக்கிற கிழிஞ்ச புடைவையோட வந்துட்டியா?'' என்று கேட்டாள் செங்கமலம்.

''ஏன் அதிலே என்ன தப்பு?''

''என்ன தப்பா? நாம என்ன பணக்காராளா, ஒரு ஆம்படையான் போனா, இன்னொரு ஆம்படையான்னு இருக்க? நம்ம மனுஷா உன்னை வாழா வெட்டின்னு தான் காறித் துப்புவா... நீ பண்ணியிருக்கிற கூத்தினாலே, பாவம், உன் தங்கைகளுக்கும் வரன் குதிரப் போறதில்லே...'' என்றாள் செங்கமலம்.

கோமளா அவள் அம்மாவின் கைகளைப் பற்றிக் கொண்டே கேட்டாள்; ''ஏம்மா... அந்த வீட்டிலே என்னாலே எப்படிம்மா இருக்க முடியும்? நான் எவ்வளவோ பார்த்தேன். அனுசரிச்சிண்டு போகலாம்னு, முடியலே. பத்து நாளைக்கொரு தடவை 'பார்ட்டி.' யாரோ வருவா... குடி, சாப்பாடு இதுதான். மாமி என்னை யாருக்கும் இன்னார்னு கூடச் சொன்னதில்லே... அவர் மாடியை விட்டுக் கீழே இறங்க மாட்டார். என்னாலே அவர்கிட்டேயும் போய்ப் பேசிண்டிருக்க முடியாது. கீழேயும் இருக்க முடியாது.. நரகந்தான். நான் இப்போ சந்தோஷமா இருக்கேன். பிடிக்கலையா?'' கோமளாவின் கண்களில் கண்ணீர் மல்கியது.

**ச**டகோபன் கட்டிலில் உட்கார்ந்தார். அவரால் இந்தச் சூழ்நிலையை ஜீரணித்துக்



கொள்ள முடியவில்லை என்பது அவர் முகத்தைப் பார்த்தால் தெரிந்தது.

"நான் அவளைச் சும்மா விடப் போறதில்லே. சண்டை போடத்தான் போறேன். என் பெண்ணோட வாழ்வைப் பாழடிச்சுட்டாளே படுபாவி..." என்று சீறினார் சில விநாடிகளுக்குப் பிறகு.

"அவ என்ன பண்ணுவா? அவன் பண்ணிக்கறேன்னு வந்தான்... நீங்களும் சம்மதிச்சேள்.. அவளை இப்போ திட்டி என்ன பிரயோஜனம்?"

"பிள்ளையோட யோக்கியதை அவளுக்குத் தெரியாதா? அவ வேண்டாம்னு கண்டிப்பாச் சொல்லியிருந்தா இந்தக் கல்யாணம் நடந்தே நடந்திருக்காது... கல்யாணம் ஆனா சரியாயிடுவானான்னு அவ பரீட்சை பாத்திருக்கா."

"வேறொரு பொண்ணோட சம்பந்தம் இருக்கும்னு நினைக்கிறேளா? பணக்காரா வீட்டுப் பிள்ளைகளைப் பத்தி ஒண்ணும் சொல்ல முடியாது" என்றாள் செங்கமலம்.

"சீ! அப்படியெல்லாம் சொல்லாதே. நாக்கு புழுத்துப் போயிடும். அவருக்கு எந்தப் பொண்ணோடயும் ஒரு சம்பந்தம் கிடையாது. எனக்கு நிச்சயமாத் தெரியும்" என்று கோபத்துடன் கடிந்து கொண்டாள் கோமளா.

"அவாத்துக்கு ஒரு பணக்கார ஆத்துப் பொண்ணு அடிக்கடி வரும். பாத்திருக்கேன்..." என்றார் சடகோபன்.

"அந்தப் பொண்ணு தங்கமான பொண்ணு. எனக்காக அவரோட சண்டை போட்டா. அவா ரெண்டு பேருக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது." என்றாள் கோமளா.

"இது அம்மாக்காரி திட்டமிட்டுச் செய்த காரியம்தான். அவளைச் சும்மா விட மாட்டேன்!"

"என்ன செய்வேள்?" என்றாள் செங்கமலம்.

"கோர்ட்லே கேஸ் போட்டு, சந்தி சிரிக்க வச்சு, பணத்தைக் கறந்துடுவேன்."

"இதனாலே கோமளா பிரச்னை தீர்ந்து போயிடுமா? வாழா வெட்டி வாழா வெட்டிதானே! பேசாமெ நான் சொல்றேன் கேளுங்கோ. கோமளா, நீ அவாத்துக்குத் திரும்பிப் போ... அவா உன்னைக் கொடுமைப்படுத்தலேன்னா, நீ அங்கே போய் இருக்கிறதிலே என்ன தப்பு?" என்றாள் செங்கமலம்.

"பணம், வசதி இருக்கு... நீ உன் இஷ்டப்படி இருந்துட்டுப் போயேன். ரொம்பப் பணக்கார ஆத்திலே இதுதான் நடக்கிறது" சென்றார் சடகோபன்.

கோமளாவுக்கு எரிச்சலாக வந்தது. அவள் உள்ளே சென்று படுத்துக் கொண்டாள். அவளுக்கு அழுகையாக வந்தது. அவளுடைய அம்மா அடிக்கடி சொன்ன வார்த்தை 'வாழாவெட்டி' அவளை மிகவும் துன்புறுத்தியது. அவளால், அவளுடைய தங்கைகளுக்குக் கல்யாணம் ஆகாமல் போகலாம். இதுதான் அவளுடைய பெற்றோரின் கவலை!

சடகோபன் மஞ்சுளாவின் வீட்டுக்குச் சென்ற போது, அவள் தன்னுடைய வீட்டு அலுவலக அறையிலிருந்தாள். 'ஹாலி'ல் உட்காரும்படி சமிக்ஞை செய்தாள். அவள் அலுவலக அறையில் இரண்டு, மூன்று பேருடன் பேசிக் கொண்டிருந்தாள். 'ஹாலி'ல் அந்தப் பணக்கார வீட்டுப் பெண் ஒரு பத்திரிகையைப் புரட்டியவாறு உட்கார்ந்திருந்தவள், சடகோபனை நிமிர்ந்து பார்த்தாள்.

"நீங்கதான் கோமளா அப்பாவா, நான் சந்தியா" என்றாள் அந்தப் பெண்.

சடகோபன் கைகளைக் கூப்பிக் கொண்டே, "கோமளா உங்களைப் பத்தி ரொம்பச் சிலாகித்துப் பேசினா" என்று கூறி விட்டுச் சிரித்தார்.

"அப்படியா...? நான்தான் அவளை ஆத்துக்குத் திரும்பிப் போன்னு சொன்னேன். இங்கே அவ என்ன பண்ணுவா? நீங்க இந்தக் கல்யாணமே பண்ணி வச்சிருக்க வேண்டாம்."

"நீங்க சுலபமா ஆத்துக்குப் போன்னு சொல்லிட்டேள். இப்போ அவ கதி?" என்றார் சடகோபன்.

"மனத்திலே சந்தோஷமில்லாமெ அவளாலே இங்கே எப்படி இருந்திருக்க முடியும்?"

"வாஸ்தவந்தான். நான் பட்சணம் பண்ணி விக்கிறவன். அஞ்சு பொண்ணு. ரெண்டு பேர் ரெண்டு வருஷமானா கல்யாணத்துக்கு 'ரெடி'யாயிடுவா. ஒரு தத்தாரிப் பிள்ளை. கோமளாவுக்குப் படிப்பும் கிடையாது. வாழாவெட்டியா ஆத்துக்கு வந்து உட்கார்ந்துண்டு, அவ ஆயுசு பூரா சந்தோஷமா இருப்பான்னு எதிர்பார்க்கிறேளா? உங்களைச் சொல்லிக் குத்தமில்லே... நீங்கள்ளாம் கை நொடிக்கிற நேரத்திலே கல்யாணம் பண்ணிண்டு, அதே நேரத்திலே ஆம்படையானைப் பிரிஞ்சு வாழறத்துக்கான மனத்தெம்பும், பணத்தெம்புமிருக்கு. எங்களுக்கு இந்த ஆடம்பரம் கட்டி வருமா?"

அவர் பேசியது சந்தியாவைச் சுடுவது போலிருந்தது. அவள் இதைப் பற்றி ஏன்

---

**"அந்தக் கதாசிரியரை மாவாட்ட விட்டது தப்பாப் போச்சு!"**

**"ஏன்... என்னாச்சு?"**

**"அரைச்ச மாவையே திரும்ப அரைச்சுட்டுப் போயிட்டாரே!"**

**— மொரப்பூர் அ. நவ்சாத்.**





## அருள்வாக்கு

"Arise, Awake — எழுந்திருங்கள், விழித்துக் கொள்ளுங்கள்" என்று, விவேகானந்தர் எல்லாரையும் தட்டி எழுப்பி, ராமகிருஷ்ணா மிஷனுக்கு motto வாக (லக்ஷ்ய வாசகமாக) வைத்தது, கடோபநிஷத்தில் வருகிற மந்திரம்தான். இப்போது நிறைய மேற்கோள் காட்டப்படும் அநேக வாசகங்கள் இந்த உபநிஷத்தில் வருகிறவையே. உதாரணமாக, "படிப்பாலோ, மேதாவித்தனத்தாலோ ஆத்மாவை அடைய முடியாது" (நாயமாத்மா) என்கிற மந்திரம்; ஜீவன் என்ற தேர்க்காரனுக்குச் சரீரம் தேர், புத்தி ஸாரதி, மனஸ் கடிவாளம், இந்திரியங்கள் குதிரைகள் என்ற விஷயம்; ஹ்ருதய குகையில் பரமபுருஷன் அங்குஷ்ட (கட்டை விரல்) பிரமாணமாக ஜோதி ரூபத்திலிருக்கிறான் என்ற ஸமாசாரம்; தீபாராதனை செய்கிற போது சொல்லும் 'ந தத்ர ஸூர்யோ பாதி' மந்திரம் ('பரமாத்மாவின் ஸந்நிதானத்தில் சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், அக்னி எல்லாமே ஒளி மழுங்கி விடுகின்றன. அதனால்தான் இவற்றுக்கெல்லாம் பிரகாசமாதலால்' இவற்றால் அவனை விளக்கிக் காட்ட முடியாது' என்று அர்த்தம். நம் அறிவெல்லாம் அந்தப் பேரறிவிலிருந்தே உண்டானதால், இந்த நம் சிற்றறிவால் அவனை விளக்க முடியாது); பிற்பாடு கீதையிலும் பகவான் சொல்லும் ஸம்ஸாரம் என்ற தலைகீழ் அச்வத்த விருக்ஷத்தைப் பற்றிய பிரஸ்தாவம்; ஹ்ருதயத்தில் குடி கொண்டுள்ள ஆசைகளையெல்லாம் ஒழித்துவிட்டால், இங்கேயே மனிதன் அமிருதனாகிப் பிரம்மத்தை அநுபவிக்கிறான் என்ற விஷயம் — இப்படி அநேக சமாசாரங்கள் இன்று Quote பண்ணப்படுவதெல்லாம் கடோபநிஷத்தில் வருபவைதான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

யோசிக்கவில்லை? அவர் கூறுவது போல், 'மனத் தெம்பும்', 'பணத் தெம்பு'ந்தான் காரணமா? ஒரு பெண்ணைக் 'காப்பாற்றி'யதாக நினைத்து, இது அவளுடைய சமூக சீர்திருத்தப் போராட்டத்தின் வெற்றி என்று சந்தோஷப்பட்டவளை ஒரு நிமிஷத்தில் வீழ்த்தி விட்டார்!

"நான் உங்க பொண்ணுக்கு ஒரு நல்ல ஏற்பாடு செய்யறேன்..." என்றாள் சந்தியா.

அப்பொழுது மஞ்சுளா 'ஹாலு'க்குள் வந்தாள்.

"நீங்க எதுக்காக வந்திருக்கீங்கன்னு எனக்குத் தெரியும். நான் பண்ணது தப்புத்தான். எப்படியாவது இந்தக் கல்யாணம் நடக்காமெ தடுத்திருக்கணும். மன்னிச்சுக் கோங்க. இப்போ என்ன செய்யணும், சொல்லுங்கோ..." என்றாள் மஞ்சுளா.

"கட்டின துணியோட பொண்ணை ஆத்துக்கு அனுப்பிச்சுட்டேளே, இது நியாயமா?" என்றார் சடகோபன்.

"நான் அனுப்பவேயில்லே. 'போறேன்'னா... நான் எப்படித் தடுத்து நிறுத்த முடியும்? கட்டின துணியோடயா வந்தா? எனக்குத் தெரியாது. அவளோட நகை, நட்டு, என்ன வேணுமானாலும் எடுத்துண்டு போங்க. பணம் வேணுமா? எத்தனை வேணுமானாலும் தரேன்."

சந்தியா ஆங்கிலத்தில் பேசினாள்: "உலகத்தில் எல்லாப் பிரச்னைகளுக்கும் விடை பணத்தில்தான் இருக்கிறதா? ஓர் ஏழை, அப்பாவிப் பெண்ணின் வாழ்க்கையோடு விளையாட உங்கள் மகனுக்கு என்ன உரிமை இருக்கிறது? உங்கள் பணம், அந்தப் பெண்ணுக்கு இப்பொழுது ஏற்பட்டுள்ள 'வாழா வெட்டி' என்ற பட்டப் பெயரை நீக்க எந்தவிதத்தில் உதவப் போகிறது? உங்கள் பணத்தைக் கொண்டு இவர் தம்முடைய மற்றைய இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்து வைக்கலாம். ஆனால் அந்தப் பெண்ணின் கதி? நான் தவறு செய்து விட்டேன். இப்பொழுதுதான் உணர்கிறேன். அன்று நான் இங்கு வந்த போது, 'உன் வீட்டுக்குப் போய் விடு' என்று சொன்னவள் நான்தான். அவள் இங்கிருந்தே போராடியிருக்க வேண்டும்..."

"என்ன போராட்டம்?" என்றாள் மஞ்சுளா.

"உங்கள் பணம் அளிக்கும் பாதுகாப்பில், துருவ் தன்னைத் தனிமைப்படுத்திக் கொண்டு, 'சோகமே சொர்க்கம்' என்ற ஆடம்பர உணர்வில், ஆகாசத் தாமரையைத் தேடிக் கொண்டிருக்கிறான். அவன் பாதங்கள் மண்ணில் பதியும்படிச் செய்வதற்கான போராட்டம்... அவள் இவ்வாறு போராட நான் நிச்சயமாக அவளுக்குத் துணை நிற்பேன்."

"இப்பொழுதே அதைச் செய்யலாமே? துருவ்வின் பாதங்கள் பூமியில் பதிந்தால் எனக்கும் சந்தோஷந்தான்..." என்றாள் மஞ்சுளா.

ஆங்கிலத்தில் அவர்கள் என்ன பேசிக் கொள்கின்றார்கள் என்று சடகோபனுக்கு விளங்கவில்லை. மஞ்சுளா கொடுப்பதாக இருந்த 'நகை, நட்டு, பணம்' ஆகியவற்றுக்கு ஏதாவது 'ஆபத்து' வந்து விடுமோ?

"கல்யாணத்திலே கோமளாவுக்குப் போட்ட நகை, ஆயுசு பூரா அவ கண்ணீர் சிந்தாம இருக்கிறத்துக்குத் தேவையான பணம், இது கொடுங்கோ போதும்" என்றார் சடகோபன்.

(தொடரும்)

# ரோஷம்

"கையிலே மட்டும் கொஞ்சம் பசை இருந்துட்டாப் போறும், ஓடோடி வந்து 'பசக்'கென்று ஒட்டிக்குவாங்க. இப்ப இவனை வெற்றிலை பாக்கு வச்சு அழைச்சாங்களாக்கும்? வந்து உக்காந்து தின்னு அழிக்கலாம்னு நினைப்பு..."

மெதுவாக விசப் பெற்ற அமிலம் தோய்ந்த வாக்கியங்கள், அவனது செவியைத் தீய்த்துக் கொண்டே இறங்கின. மெதுவாக மாமாவின் முகம் பார்த்தான்.

அவரோ தினசரிக்குள் முகம் புதைத்திருந்தார்.

மனைவியின் பேச்சுக்கு ஒப்புதலா?

அப்படித்தான். அவர் இப்போது வசந்தன் பக்கம் பேசுவாரேயானால், பொருள் நஷ்டம் அவருக்கு அல்லவா? அதனால் இப்போது மனைவிக்குக் கட்டுப்படுகிறவர் மாதிரி பாவ்லா.

இந்தப் பாவ்லாவினால் எத்தனை வசதி அவருக்கு!

'நான் என்னப்பா பண்ண முடியும்? உனக்கு உதவி பண்ணினால் பார்வதம் கோவிச்சுக்குவா. உன்னாலே எங்களுக்குள்ளே வீண் சண்டை வரணுமா? அப்படி நீ விரும்புறியா? உன் வழியை நீயே பார்த்துக்க. பேசாம, ஆளை விட்டு ஒதுங்கிக்கோப்பா...'

இதைத்தான் சொல்கிறார் இப்போதைய இந்தப் பாவ்லாவின் மூலம்.

புரிகிறது.

ஆனால்... வேறு வழிதான் புலப்படவில்லை.

தற்போது அவனுக்கு மாமா கோபால ரத்னத்தின் உதவி மிகவும் தேவைப்படுகிறதே! அதனால்தான் அத்தையின் அமில வார்த்தைகளையெல்லாம் தாங்கிக் கொண்டு நிற்கிறான்.

வசந்தனுக்கு வயது வெறும் பதினாறுதான். இவன் பஞ்சாயத்துப் பள்ளியில் நுழைந்த போது, இவனைப் பெற்றவன், மட்டற்ற குடியினால் கைப்பிடிச் சுவரற்ற கிணற்றில் தவறி விழுந்து, இவனை அப்பன் இல்லாதவனாக்கினான்.

அப்புறம் தெரு முழுவதும் உள்ள வீடுகளையும் அந்த வீடுகளின் பாத்திரங்களையும் சுத்தம் செய்ததில், வசந்தனை எட்டாம் வகுப்பு வரை அனுப்ப முடிந்தது அவனைப் பெற்றவளால்.

இனியும் படிக்க வேண்டுமானால் எவராவது உதவி செய்தாக வேண்டும்.

அப்போதுதான் கொழும்பு மாமா என்கிற கோபால ரத்னத்தின் நினைவு வந்தது. அவர் கொழும்பிலே போய் நிரந்தரமாகத் தங்கி விட்டாலும் கூட, அவ்வப்போது திருநெல்வேலிக்கு வந்து, தாமிரபரணியில் மூழ்கித் திளைத்து, உறவினர்களை எல்லாம் எட்டிப் பார்த்து விட்டுப் போவது வழக்கம்.

இந்த 'எட்டிப் பார்த்து' என்பது நிஜமாகவேதான். எவருடனும் ஒட்டாமல், உறவாடாமல் வந்து விட்டுப் போவார்கள். ஒட்டி உறவாடினால் சேர்த்து வைத்திருக்கும் பணத்திற்கு வினை என்று பயம். உறவு விட்டுப் போகாமல் இருப்பதற்கே... இந்த எட்டிப் பார்த்தல் சமாச்சாரம்.

கொழும்பு மாமா ஒன்றும் அத்தனை கருமி இல்லை. ஆனால், அவருக்கு வாய்த்தவள்தான் நால்வகை உபாயங்களையும் கையாண்டு அவரை மாற்றி விட்டு விட்டாள்.

கொழும்பு நகரில் பெரிய ஜவுளிக் கடை இவரதுதான். 'கோபால் ஜவுளி ஹால்!' என்றால் ஸ்ரீலங்காவே அறியும்.

ஊரும் உறவும் அவரிடம் பெரிதாக எதையும் பெற்றுக் கொண்டு விடவில்லையாயினும், ஏதோ பெருந்தனக்காரரின் சினேகிதம் என்கிற கௌரவத்திற்காகவாவது அவருடன் பழகினார்கள்.

ஆனால் இப்போது வசந்தனின் வருகை இப்படி ஒரு கௌரவம் வேண்டும் என்று அல்ல.

மோப்ப சக்தி மிகுந்த பார்வதம் இதைக் கண்டுபிடித்துக் கொண்டுதான், கடுசொற்களைப் பதமாய் வீசினாள்.

அவளின் அமில வார்த்தைகளும், அவரின் பராமுகமும் வசந்தனின் பிஞ்சு இதயத்தைக் கசக்கிப் பிழிந்தன.

இனியும் அங்கு நிற்பதும், உதவி பெறுவதும் தனது தன்மானத்தை அவர்களின் கால் செருப்பாக்குவதற்கு ஒப்பு என்று புழுங்கினான்.

அதனால், சொல்லிக் கொள்ளாமலேயே வெளியேறினான்.

'படிப்பு மட்டுமே வாழ்வை நிர்ணயித்து விட முடியாது.' என்று அழுத்தமாய் எண்ணியவன் தனது கரங்களையே பார்த்தான்.

திசைமாற்றம் துவங்கி விட்டது.

பழைய இரும்பு, பிளாஸ்டிக் பொருட்களுக்குப் பண்டமாற்றுச் செய்கிற தொழிலைத் துவக்கினான்.

நடந்து போனவன், சைக்கிளில் போகலானான். திருநெல்வேலி ஜங்ஷன் மேம்பாலம் அருகே சிறியதாய்க் கடை போட்டான்.

இப்போது அவன் ஹார்டுவேர் வியாபாரி! தென்காசி, தூத்துக்குடி, அம்பாசமுத்திரம், வள்ளியூர், நாகர் கோவில் என்று கிளைகள் முளைத்து பணமாய்க்

உமாகல்யாணி

குவித்தன.

பாளை — திருச்செந்தூர் சாலையில் எவரையும் நிமிர வைக்கிறது அவனது 'வசந்த விஹார்!'

கமலம் மனைவியாக வந்தாள் வைரச் சுமைகளோடு.

காலையில் மாருதியில் போனால், மாலையில் கண்டஸாவில் திரும்பி வருவான்.

எப்போதேனும் கொழும்பு மாமா நினைவு வரும். கூடவே பார்வதம் அத்தையும் அமில வார்த்தைகளும்!

சிரித்துக் கொள்வான்.

காலம்தான் எப்படிப்பட்ட மாற்றங்களையெல்லாம் எவ்வளவு வேகமாய்ச் செய்து, மேட்டைப் பள்ளமாக்கி, பள்ளத்தை மேடாக்குகிறது.

இப்போது நம்ப இயலாத உயரத்தில் வசந்தன் ஒரு வி. ஐ. பி. ஆக! வி. ஐ. பி., ஆக இருந்த கோபாலரத்னம் இப்போது அடையாளம் தெரியாது சிறுத்துப் போன சின்னப் புள்ளியாய்!

இலங்கையின் கலவரங்களின் போது அவரது வீடும், வியாபார நிறுவனங்களும் சூறையிடப்பட்டதால் கட்டிய துணியுடன், அகதியாய்... இந்திய மண்ணிற்கு வர வேண்டிய துர்ப்பாக்கிய நிலைமை.

கொழும்புக்காரர் என்கிற பெருமையுடன் திருச்சி விமான நிலையத்தில் ஒரு வி. ஐ. பி. போல அவர் வந்திறங்குவதும், ஊரும் உறவும் வரவேற்பதும் முற்றுப் பெற்றுத் தலைகீழான மாற்றம்!

பார்வதம் இப்போது வசந்தனை எண்ணினாள். அவனது பளபளப்பு எண்ணும்படி தூண்டியது.

''என்னங்க, நாம்ப இப்ப வசந்தன் கிட்டே போனால் என்ன? நம்மை வரவேற்று ஏத்துக்குவாங்க. இந்த வயசு போன காலத்திலே நம்மாலே உழைச்சுப்



பிழைக்க முடியுமாங்க? அவன் நம்மை நல்லாப் பார்த்துக்குவாங்க.'' என்றாள் பார்வதம்.

கோபாலரத்னம் மிக நிதானமாய் மனைவியை ஏறிட்டார். அப்புறம் பார்வையை வேறு புறம் திருப்பிக் கொண்டு விட்டார்.

''என்னாலே இந்த முகாமிலே இருக்கவே முடியலை. நம்ப வசந்தன்தான் இப்ப திருநெல்வேலியிலே கொழிக்கிறானாமே! அவன்கிட்டே போயிட்லாம்ங்க.''

அவர் மனைவியிடம் பார்வையைத் திருப்பினார்.

''எந்த முகத்தை எடுத்து மாட்டிக்கிட்டு அவன் முன்னாடி போய் நிற்கலாம்னு சொல்றே?''

ஆனாலும் நீங்க மோசம்ங்க. வசந்தன் வந்து அத்தனை அருமையாய்க் கூப்பிட்டானே. நீங்க கத்தமாய் மறுத்துட்டீங்களே. அவன் தன்னோட மனசுல பழசு எதையும் வச்சுக்காம வந்து கூப்பிட்டானே. நம்மைக் கடைசி வரைக்கும் நல்லவிதமாய் வச்சுக் காப்பாத்துறேன்னு சொன்னானே! ஏங்க அப்படி மறுத்துட்டீங்க?''

பார்வதம் தவிப்புடன் கேட்டாள்.

கோபாலரத்னமோ இறுகலான முகத்துடன் இருந்தார்.

''பார்வதம், நமக்கு அதுக்கெல்லாம் உரிமை ஏது?'' என்று மெதுவாகக் கேட்டார்.

''உறவுங்கிற உரிமை இருக்கப் போய்த் தானே, அவனே வந்து கூப்பிட்டான்.''

''அவனுக்கு உதவி தேவைப்பட்ட போது மட்டும், நாம் இந்த உறவு உரிமையை நினைச்சுப் பண்ணாம ஒதுங்கிட்டமே. இப்ப நமக்கு உதவி தேவைப்படுறப்ப மட்டும் அந்த உரிமையை நினைவூட்டனுமாக்கும்? அவன் நிர்க்கதியாய் நின்னப்ப மட்டும் கை கொடுக்காத நாம், இப்ப நமக்கு நிர்க்கதி வந்ததும் கை கொடுக்கச் சொல்லி... அவன் முன்னாடி போய் நிற்கணுமா?''

மனசை ரணப்படுத்தும் நிஜமான கேள்விகள்!

''அவனே சொல்லலியா, அவனை நாம்ப அப்படி விட்டதாலேதான், அதை ஒரு சவாலாய் வச்சு முன்னுக்கு வந்ததாய்ச் சொன்னானே. அந்த நன்றியைக் காட்டத் தானே நம்மை இப்ப கூப்பிடுறதாகவும் சொன்னான்.''

''அது அவனோட பண்பாடு. இப்ப நாம்ப இதையே ஒரு சவாலாய் எடுத்துக்கிட்டு, நாமும் அவனை மாதிரி முன்னேற முயற்சி பண்ணலாமே!''

''இந்த வயசு போன காலத்திலியா?''

''முயற்சி பண்றதுக்கெல்லாம வயசு ஒரு கணக்கா? மனசுதான் முக்கியம். அவன் நிர்க்கதியாய் நின்னப்ப சின்ன வயசுதான். ஆனால் இன்னிக்கு ஓகோன்னு முன்னேறிடலியா?

''அவன் வளர்ற பையன். வளர்றப்பவே தன் பொசிஷனையும் வளர்த்துக்கிட்டான். நாம வளர்ந்து தளர்ந்தாச்சு. இனிமே முடியுமா?''

''ஏன் முடியாது பர்வதா? அனுபவமும் இல்லாம, வயசும் இல்லாம ஒரு சின்னப் பையனாலே 'ஓகோ'ன்னு வளர முடிஞ்சிருக்கே. நமக்கு அனுபவம் இருக்கு. வயசு ஆனாலும் வலுவும் இருக்கு. இதை ஏன் முதலீடாய் வச்சு முன்னேறக் கூடாது? ஓகோன்னு இல்லாட்டியும் ஓரளவு வாழுறதுக்காவது நம்ப கால்லியே நின்னுக்கிற மாதிரி பண்ணிக்கலாமே. நாம்ப விரட்டினதை ஒரு ரோஷமாய் வச்சு அவன் முன்னேறினது போல, நாம்ப அப்படிப் பண்ணினதுக்கு ஆதங்கப்பட்டு, வெட்கப் பட்டு, வேதனைப்பட்டு. அவன் உதவியைக் கேட்க ரோஷப்பட்டு... முன்னேற முயற்சி பண்ணலாமே?''

''முடியுமாங்க...?''

''முடியும். நாம்ப விரட்டினவனே நம்மை வந்து கூப்புடுற நிலைக்கு வந்துட்டமேங்கிறதை நினைச்சாப் போறும், ரோஷம் வந்துரும். நரம்பெல்லாம் நிமிர்ந்துக்கும்...'' என்றார் நம்பிக்கையோடு!

## சொந்த ஊர் சொர்க்கம்!

கல்லூரிப் படிப்பைக் கருதி நீங்கள் வேறு ஊரில் தங்கியிருக்கலாம். ஆனாலும் பிறந்து வளர்ந்த ஊரின் ஞாபகம் இல்லாமல் போகுமா? எப்போ விடுமுறை வரும், எப்போ ஊர் திரும்புவோம் என்ற ஏக்கம் எட்டிப் பாராமலிருக்குமா? சில பல குறைகள் இருப்பினும் சொந்த ஊரே சொர்க்கம் என்று ஏன் கருதுகிறீர்கள்? இயற்கை எழில், வரலாற்றுச் சிறப்பு, மக்களின் மனப்பாங்கு, ஊர்ப் பெரியவர்களின் உயர் குணங்கள், நினைவில் நிற்கும் சம்பவங்கள் என்று பல கோணங்களில் சிந்தித்து எழுதலாமே?

கல்லூரி முகவரியுடன் வரும் சிறந்த ஒரு பக்கக் கட்டுரைக்குப் பரிசு ரூ. 50/—. பிரசுரமாகும் சிந்தனைச் சிதறல்களுக்கு ஆறுதல் பரிசு. மிக அதிகமான முதல் பரிசு பெறும் மாணவருக்குப் பொன் விழா மேடையில் ரூ. 2500/— சிறப்புப் பரிசு!

முடிவு தேதி: 27.4.91. உறை மீது ''சொந்த ஊர் சொர்க்கம்'' என்று குறிப்பிடவும்.

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**




**கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி**



வாடிக்கையாளர்களுக்கு

**சேரன் சிட் பண்ட்ஸ் -ன்**

தமிழ் புத்தாண்டு நல் வாழ்த்துக்கள்.

புதிய சீட்டு குருப்புகள் சேமிப்பு விழா

**ரூ. 10,000 முதல் ரூ. 5,00,000 வரை புதிய சீட்டு குருப்புகள் ஆரம்பமாகிறது.**

இச்சிறப்பு சீட்டு சேமிப்பு விழா 14.4.91 முதல் 7.5.91 வரை மட்டுமே. முந்துங்கள்

புதிய உறுப்பினர்களாக சேரும் அனைவருக்கும் **வெகுமதி** உண்டு.

பதிவு மற்றும் தலைமை அலுவலகம் :



**சேரன் சிட் பண்ட்ஸ் (பி) லிமிடெட்**

''சேரன் டவர்ஸ்'', 6/25, அரசு கலைக்கல்லூரி சாலை, கோயமுத்தூர் - 641 018.
போன் : 30315, 26197, 37658. டெலக்ஸ் : 0855-538 CARE IN பேக்ஸ் : 0422-33730

கிளைகள் : சென்னை : எண் 15, 3வது மாடி, ராஜா அண்ணாமலை பில்டிங்ஸ், 19, மார்ஷல்ஸ் ரோடு, தொலைபேசி : 473538 மதுரை : 3வது மாடி, KJR காம்ப்ளக்ஸ், 16, வடக்குவெளிவீதி, தொலைபேசி : 37276. ஈரோடு : திருக்குமரன் பில்டிங்ஸ், 11-F, மேட்டூர் ரோடு, தொலைபேசி : 77636. * திருப்பூர் : முதல்மாடி, பிரிமியர் பிளாசா, பின்னி காம்ப்ளக்ஸ், குமரன் ரோடு, தொலைபேசி : 25000. (*14.4.91 முதல் மேற்கண்ட புதிய முகவரியில் செயல்படுகிறது.) நீலகிரி : திரு. கே.பி. ராஜு, ரெசிடெண்ட் மானேஜர், S/o. கே. பெள்ளி, கேர்பன் கிராமம் கெங் போஸ்ட், கோத்தகிரி. கரூர் : திரு. ஆர். ராமச்சந்திரன், ரெசிடெண்ட் மானேஜர், (Bata Shop) 963-E, கோயமுத்தூர் ரோடு, தொலைபேசி : 22020




**NCL INDUSTRIES LIMITED** ☎ 237481, 234548
VII FLOOR, RAGHAVA RATNA TOWERS
CHIRAG ALI LANE, HYDERABAD-500 001. INDIA
GRAMS : ENCIELIND. TELEX : 0425-6887 NCLH-IN

சென்ற வாரம் —

கீர்த்தி — மீரா — புதுசாக் கல்யாணமானவங்க. மெட்ராஸ்லே கல்யாணம். தஞ்சாவூர்லே முதலிரவு. 'அது அப்படித்தான் எங்க வழக்கம்'னு கீர்த்தியோட அம்மாக்காரி சொல்லிட்டா. பெரிய குடும்பம். கீர்த்தியோட கொள்ளுப் பாட்டியில ஆரம்பிச்சு, தன் பெண்ணைக் கட்டணும்னு — கல்யாணத்தையே நிறுத்திடற அளவுக்குச் சண்டை போடற நாகு மாமா வரைக்கும்... ரொம்பப் பெரிய குடும்பம்.

கீர்த்திக்கு உத்தியோகம் மெட்ராஸ்லே. ஆபீஸ் பார்ட்டியில கலந்துக்கிட்டு, அப்புறம் பெங்களூருக் ஹனிமூன் போய் அங்கேயே முதலிரவைக் கொண்டாடணும்னு அவனோட ஆசை. அதைச் சாந்தி முகூர்த்த அறையில அவன், மீரா கிட்டச் சொல்றான்.

இதாங்க போன வாரம்.

இனிமேல் —

2

# நேற்றுவரை நந்தவனம்

"பார்க்கறதுக்குத்தான் வாட்டமும் சாட்டமுமா இருக்கானே தவிர, அவனுக்கு ஒண்ணுமே தெரியாது. வீட்டுல அவன் கண்ணுல ஒரு பொறுப்பும் காட்டினதில்லே... நீதான் எல்லாத்தையும் கவனிச்சுக்கணும்..."

கீர்த்தியின் தாய், மீராவின் தலைப் பின்னலில், மல்லிகைச் சரத்தையும் வைத்து, கூடவே இரண்டு வேப்பிலைகளையும் செருகுகிறாள்.

சித்தப்பாக்களில் ஒருத்தர், கீர்த்தியுடன் சேர்ந்து பெட்டியில் சாமான்களை பாங்காய் எடுத்து வைத்துக் கொண்டே அதட்டுகிறார்.

"அவளாவது சின்னவ. வளர்ந்தாச்சே தவிர, பொறுப்பு கிடையாதுன்னு என் காலத்துல இருந்து கீர்த்தி வரைக்கும் சொல்லிட்டே இருக்கீங்க. ஆனா, பொறுப்பு என்னன்னு பிள்ளைகளுக்கு விளக்கிச் சொல்லிக் கொடுத்ததுண்டா..."

"ஆம்பிளைங்க பொறுப்பு — சம்பா இச்சு, பெண்டாட்டி கையில கொண்டு வந்து தர வேண்டியதுதானே சித்தப்பா. இப்ப நீங்க எல்லாரும் செய்யலையா.. எல்லாம் எனக்குத் தெரியும்..."

கீர்த்தி, மீராவைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டிக் கொண்டே சொல்கிறான்.

"என்னத்தைத் தெரியும்? அம்பது வயசாறது. எனக்கே இப்பத்தான் உங்க சித்தியோட சுபாவம் புரிய ஆரம்பிச்சிருக்கு. அப்பா கீர்த்தி, வெறுமே சம்பளத்தைக் கொண்டு வந்து தர்றதுனால மாத்திரம் இந்தப் பொம்பிளைங்களைத் திருப்தி செஞ்சிட முடியாது. ஒவ்வொண்ணுத்துக்கும் ஒவ்வொரு இடத்துல சூட்சுமம் இருக்கும். தினமும் ஏதாவது ஒரு விஷயத்துக்காக இவளுங்க முதுகுல தட்டி சபாஷ் போட்டுண்டே இருக்கணும். இன்னிக்கு ரசம் ரொம்ப ஜோர்; இல்லையா... இன்னிக்கு என்ன உன் முகம் இத்தனை பிரகாசமாயிருக்கு. அட, அதுவும் இல்லையா — தலைய வலிக்கிறதா மீனா... நீ இப்படி சோர்ந்து போய் நான் பார்த்ததே இல்லையே... இப்படி ஏதாவது..."

சித்தப்பாவின் பேச்சைக் கேட்டு, பெண்கள் குபீரெனச் சிரிக்க — அவர், அத்தனை சிரிப்புச் சப்தத்திலும், தம் மனைவியின் சிரிப்பை இனம் கண்டு கொண்டு மேலும் உற்சாகமாய்ச் சொல்கிறார்.

"நீ சாப்பிட்டாச்சுன்னா சரிதான்னு ஏப்பம் விட்டுட்டு ஹாலுக்கு வந்துடக் கூடாது. பெண்டாட்டி சாப்பிட்டாளான்னு கவனி. முடிஞ்சா ரெண்டு பேருமாச் சாப்பிடுங்கோ. ரெண்டு மூணுல வெளியில இருந்து ஸ்வீட் காரம் வாங்கிட்டு வா. யாரும் இல்லையின்னா ஊட்டி விடு. தோஷமில்லே. சனி, ஞாயிறுல சினிமா — பீச்சுன்னு அழைச்சிட்டுப் போ... தினமும்தான் நீ அடுப்பங்கரையிலேயே இருக்கியே... இன்னிக்கு ஒரு நாளாவது ரெஸ்ட் எடுத்துக்கன்'னு சொல்லு... அட, அப்படிப் பார்க்காதேடா. நீ சொன்னதும் அவ சரியின்னு சொல்லிட மாட்டா. இதெல்லாம் அவளுக்கு ஒரு டானிக். 'சமைக்கறது ஒரு வேலையா'ன்னு இன்னும் கொஞ்சம் இழுத்துக் கட்டிண்டு செய்யும்..."

"சித்திய அப்படித்தான் —"

"ஓஹோஹோ.."

கூடம் முழுக்கச் சிரிப்பலைகள்...

சித்தப்பா, இன்னும் கூடப் பேசிக் கொண்டே இருப்பாராயிருக்கும். கூச்சம் தாங்க முடியாத சித்தி 'விருட்'டென எழுந்து போய் ஒரு தம்ளர் காப்பியைக் கலந்து கொண்டு வந்து அவரிடம் வைத்தாள்.

"இப்ப எனக்கு எதுக்கு காப்பி?"

"தொண்டை கம்மிப் போச்சு. குடியுங்கோ..."

"ஆகா... நீ சொன்னாச் சரிதான்.."

அவர், அடித் தொண்டையில் அருகிலிருந்த மீராவுக்கும் கீர்த்திக்கும் மட்டும் கேட்கிற குரலில் சொல்கிறார்.

"இதையும் கவனிச்சுக்கடா. பெண்டாட்டி எது சொன்னாலும் சரி, சரியின்னு தலையை ஆட்டிடு. எதிர்த்துக் குரல் கொடுத்தா நீதான் தோத்துப் போவே.

அனுராதா ரமணன்



அதுவே பேசும்; கட்டளையிடும்; சிணுங்கும்; அழும்; எரிஞ்சு விழும்; அப்புறம், என்னை மாதிரி ஒரு ராட்சஸி உண்டான்னு தன்னைத் தானே திட்டிக்கும்; அப்புறம் சிரிக்கும். விட்டுடு.. தாட்டாறு மாதிரி தளும்பிக் குதிச்சுட்டுத் தானா அடங்கிடும்... அப்படி அடங்கலையா... வருத்தப்படாதே. அவளுக்கு அடங்கிப் போக நாம கத்துண்டிருப்போம்...''

நாகு மாமா — இவர்களின் இடையே புகுந்து 'சுள்'ளென எரிந்து விழுகிறார்.

"ஏழே முக்காலுக்கு பஸ். மணி இப்பவே ஆறரை. ஆட்டோ பிடிச்சு, பஸ் ஸ்டாண்ட் போகவே முக்கால் மணி நேரமாயிடும். இப்ப இந்த அட்வைஸ் தேவைதானா?''

''ஏண்டா பஸ்லேயா போறே... சொல்லவே இல்லையே...''

— இது நேரம் வரையில் மீராவையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்த கிழவி — பேரனைப் பார்த்து அதட்டுகிறாள்.

''பேசாம ரயில்லே போறதை விட்டுட்டு, பஸ்ஸாம் கிஸ்ஸாம் எதுக்குடா?''

இது கீர்த்தியின் தந்தை.

"என்னடா ராஜா... டிரெயினை விட பஸ் வசதியோ... பேசாம ஒரு ஃபர்ஸ்ட் கிளாஸ் கூபே எடுத்திருக்கலாமேடா...'' என்கிறார் சித்தப்பா.

**நா**கு மாமா இதற்காகவே காத்திருந்தாற் போல 'வெடுக்'கெனச் சொல்கிறார்:

''எங்கே... நம்ம குடும்பத்துப் பொண் — புகுந்த வீட்டுக்குப் போயிட்டு பிறந்தகம் வரணும்னா — இன்னமும் நாமதான் ஃபர்ஸ்ட் கிளாஸ் டிக்கெட் எடுத்துக் கொடுக்கறோம்... இங்கே என்னடான்னா என்னமோ அவங்கதான் பிள்ளையைப் பெத்த சம்பந்தி மாதிரி வந்தாங்க... சாந்தி முகூர்த்தம் வரைக்கும் இருந்தாங்க... பகல் டிரெயின்லே புறப்பட்டுப் போயே போயிட்டாங்க. அதெல்லாம் மரியாதை தெரிஞ்—''

கீர்த்தியின் முகம் மாறி விட்டது. கையில்

எடுத்த துணிமணிகளை அப்படியே போட்டு விட்டு, நாகுவின் எதிரில் வந்து, இடுப்பில் கை வைத்து முறைக்கிறான்:

''பத்து நாள் முன்னாலேயே நான் — ரெண்டு ஃபர்ஸ்ட் கிளாஸ் ரிஸர்வ் பண்ணச் சொல்லி, உம்மகிட்ட பணத்தைக் கொடுத்தேனில்லே? நீங்க அப்ப எல்லாம், என்னைப் பழிவாங்கணும்னு உள்ளூரப் பொருமிட்டிருந்தீங்க... அது இப்பத்தானே தெரியறது.. இதுவே உம்ம பொண்ணை நான் கல்யாணம் செஞ்சிட்டிருந்தா — ரயில்வே ஸ்டேஷன்லேயே குடியிருந்தாவது ரெண்டு ஸீட் வாங்கி இருக்க மாட்டீங்களா.. மாமா, உங்க கோபத்தை இப்படிக் காமிச்சிட்டு அநாவசியமா எங்க மாமனார், மாமியாரைச் சொல்றீங்களா..''

''நாகு, அவனை அலட்சியமாய் ஒரு பார்வை பார்க்கிறார்.

''அட போடா... இப்படித்தான் நான் உன்னைப் பழிவாங்கணுமாக்கும். ஏதோ என் தங்கையோட பிள்ளையாச்சேயின்னு டிக்கெட் வ்ாங்க ஓடினேன். என் பொண்ணுக்கு என்னடா ராஜாத்தி... உன்னை விட, மணிப்பயலாப் பார்த்து நான் பிடிக்கிறேன்.. பாரு..''

மீராவுக்குத் தர்மசங்கடமாக இருக்கிறது.

என்ன விடு இது.... ஒரு நிமிஷம் பார்த்தால் கட்டிக் கொண்டுப் புரளாத குறையாய்... சித்தப்பா பிள்ளை என்கிற வயது வரம்பையெல்லாம் கடந்து சகலத்தையும் பொதுவில் வைத்துச் சிரிப்பாய்ச் சிரிக்கிறது....' அடுத்த நிமிஷமே — ஒருவர் சட்டையை மற்றவர் பிடித்துக் குலுக்காதக் குறையாய் அடித்துக் கொள்கிறது...

கீர்த்தியின் தாய்தான் குறுக்கே புகுந்து சமானிக்கிறாள்.

''நேரமாச்சுடா.. கிளம்பேன். பாட்டிக்கு நமஸ்காரம் பண்ணு...''

கிழவி, தன் விபூதி சம்புடத்திலிருந்து துணுக்குப் பிரமாணம் விபூதியை எடுத்து கீர்த்தி — மீராவின் நெற்றியில் இட்டு விட்டு, பேரனையே உற்றுப் பார்க்கிறாள்.

''என்ன பாட்டி?''

''ஒண்ணுமில்லே... அடுத்த தடவை நீ வரச்சே நான் உயிரோட இருப்பேன்னு தோணலை. அதான்...''

மீரா, தலையைக் கவிழ்த்துக் கொள்கிறாள். அவனோ கலகலவெனச் சிரிக்கிறான்.

''உக்கும். எங்க அப்பாவுக்குக் கல்யாணமான காலத்துலே இருந்து நீங்க இப்படித்தான் சொல்லிட்டிருக்கறதாக் கேள்வி. அதெல்லாம் அத்தனை சுலபமாப் போக மாட்டீங்க. உலகத்துல அனுபவிக்க இன்னும் எத்தனை இருக்கு? இன்னும் எத்தனை விரதம்... எத்தனை கல்யாணம்... எத்தனை இட்லி... எத்தனை பொங்கல்..''

மீரா, கணவனின் கரத்தை 'வெடுக்' கெனக் கிள்ளுகிறாள்.

இதற்குள் வாசலில் ஆட்டோ சப்தமிட... தலைக்கு ஒரு சாமானாய்த் தூக்கிக்

கொண்டு, வண்டியைப் பார்க்க ஒவ்வொருவரும் ஓட...

கீர்த்தி — செல்லமாய்க் கிழவியின் தோள் பட்டையில் தட்டி விட்டுக் கிளம்புகிறான்.

''கவலைப்படாதீங்க பாட்டி. அப்படியே கண்ணை மூடிட்டீங்கன்னாலும் ஒரு தந்தி அடிங்க.. ஓடி வந்திடுவேன். கொள்ளுப் பேரன்கள்லே மூத்தவன். நான் வந்து தோள் கொடுக்காம — நீங்க இந்த வீட்டை விட்டுக் கிளம்பிடுவீங்களா என்ன...''

மீராவுக்கு அந்தக் கணத்தில் கீர்த்தியின் மீது கோபம் கூட வந்தது...

'மனுஷருக்கு எந்த நேரத்துல ஜோக் அடிக்கறதுன்னு ஒரு விவஸ்தையே கிடையாதா?'

ஆட்டோவில் கீர்த்தியின் பக்கத்தில் நெருக்கி அடித்துக் கொண்டு அவனது அப்பாவும் ஏற முயற்சி செய்ய, நாகு, அவர் கையைப் பிடித்து இழுக்கிறார்.

''இந்தாங்க மாப்பிள்ளை... நீங்க எங்கே புறப்பட்டுட்டாப்பல?''

''நல்லாயிருக்கே. என் பிள்ளைய வழியனுப்ப நான் போக வேண்டாமா?''

''தெரியும். அதுக்காகத்தானே ரெண்டு ஆட்டோவாக் கொண்டு வந்தேன். அவங்க சின்னஞ் சிறுசுங்க... ஏதாவது பேசிட்டே போகலாம். நாம கழண்டுக்கணும் மாப்பிள்ளை... வாங்க... பின்னாடி நிக்கற வண்டியில போகலாம்.''

''ஓ... ஓ... அதுவும் சரிதான்..''

அசடு வழியும் அப்பாவை, ஒரு கையால் அணைத்தபடி செல்லும் நாகுவையே ஒரு கணம் இமைக்காமல் பார்க்கிறான் கீர்த்தி.

''நல்ல மனுஷன்தான். சமயத்துல முன் கோபம் வந்து ஆளையே கெடுத்துடறது...''

வாய் பேசினாலும் அவனது வலது கை மீராவின் இடுப்பைச் சுற்றி வளைக்காமல் இல்லை.

''ஷ்... என்னது இது.. நாம ஆட்டோவுல இருக்கோம்.. தெரியுமில்லே?''

மீரா — சின்னக் குரலில் உஷ்ணமாய்ச் சொல்கிறாள்.

வண்டி அதன் வழியில் ஓடினாலும், ஆட்டோ டிரைவர், தன் பக்கத்திலிருந்த சின்னக் கண்ணாடி வழியே தங்களையே கவனிப்பது போல — ஒருவித பிரமை.

கீர்த்தியோ அவளின் சீற்றத்தைக் கண்டு கொள்ளாமலேயே உற்சாகமான குரலில் சொல்கிறான்:

''இது ஆட்டோன்னு தெரிஞ்சுதான் சீண்டறேன். மீரு... உனக்கு ஒரு விஷயம் சொல்லட்டுமா? புருஷன் பெண்டாட்டிக்குள்ளே இருக்க வேண்டிய நெருக்கத்தைக் கூட இந்தப் பணம் பிரிச்சுடறது தெரியுமோ... நீ வேணா கவனி இனிமே. காருல போற தம்பதிகளை விட ஆட்டோவுல போற ஜோடி நெருக்கமா இருப்பாங்க... ஆட்டோவை விட சைக்கிள் ரிக்ஷா — பரம உத்தமம். அதே மாதிரிதான் ரயில்லே — எதிரும் புதிருமா — பெர்த் கிடைச்சிருந்தா தூங்கிட்டே போகணும்.. இதுவே பஸ்ஸுன்னா ராத்திரி முழுக்க — பக்கத்துப் பக்கத்துல... எப்படியும் பார்க்கப் போனா இருக்கறவனை விட — இல்லாதவன்தான் வாழ்க்கையை முழுசா அனுபவிக்கிறான். நீ என்ன சொல்றே?''

''முதல்லே கையை எடுங்க...''

''ஓ.கே... பெங்களூர் போனதும் முதல் காரியமா இருக்கறதுலேயே சின்னதா ஒரு சைக்கிள் ரிக்ஷா தேடணும்.. அதுல ஏறிட்டு எங்க அத்தானோட ஃபார்முக்கு...''

மீரா, அதற்கு மேல் பேச விடாமல் அவனது வாயை இறுகப் பொத்துகிறாள்.

வண்டி, பஸ் நிறுத்தத்தில் ஒரு குலுக்கலுடன் நிற்க, பின் வண்டியில் வந்த நாகு, வேகு வேகென்று ஓடி வருகிறார்.

(தொடரும்)

# ஜில்லென்று ஒரு ஃபிரிஜ் பரிசு!



ஃபிரிஜ் (165 லிட்டர்) பரிசு பெற வேண்டுமா? இந்தத் தொடர்கதையைக் கவனமாகப் படித்து, நாங்கள் வேண்டுமென்றே செய்துள்ள ஒரு தவறைக் கண்டுபிடியுங்கள். 60 ஆம் பக்கம் இடம் பெறும் கூப்பனைப் பூர்த்தி செய்து கத்தரித்துப் பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள். கதை முடியும் வாரம் எல்லாக் கூப்பன்களுடன் 5—10 வரி விமர்சனமும் எழுதி அனுப்பினால், வெற்றி பெறுகிறவருக்கு ஃபிரிஜ் பரிசு. ஆறுதல் பரிசுகளும் உண்டு!

> **சிரிக்க வையுங்கள்;**
> **சிங்கப்பூர் செல்லுங்கள்!**

கட்சித் தலைவர்: மாநாட்டில் ஏகப்பட்ட வேஷ்டி சட்டை கிழியும்னு எதிர்பார்க்கிறோம்.

— எஸ். கந்தரராஜ், பாளையங்கோட்டை.

# கட்சி மாநாட்டில் ஜவுளிக் கடை எதற்கு?




● எனது நண்பர் சிறுதொழில் கடனுக்கு மனுச் செய்திருந்தார். வங்கி மானேஜர் கடன் கொடுப்பதை இழுத்தடித்தார். நாங்களும் நடையாய் நடந்தோம். ஒருநாள் நண்பருக்குக் கோபம் வந்துவிட்டது. ''ஆமா சார், இப்படித் திரும்பிக் கட்றேன்னு ஒழுங்காக் கேட்டாக் கொடுக்க மாட்டிங்கதான். நான் பயங்கரவாதியா மாறி பாங்கைக் கொள்ளை அடிச்சு, அப்புறம் துப்பாக்கியெல்லாம் கீழே போட்டுவிட்டுச் சரணடைந்து திருந்தி வந்தா, அதை நீங்க விழாவா எடுத்து, லோன் கொடுப்பிய'' என்றாரே, பார்க்கலாம்!

— ஆ. கோவில்குமார், ஆவுடையார்கோவில்.

○ ○ ○ ○

● பக்கத்து வீட்டுக் குழந்தை, சாப்பிட அடம் பிடிக்கும் போது, விகாரத் தோற்றம் கொண்ட எதிர் வீட்டு 'வாட்ச்மேன்' வலிய வந்து முகத்தை மேலும் விகாரமாக்கிக் கொண்டு பிராணிகள் போல் ஒலி எழுப்புவான். குழந்தை சாப்பிட்டுவிடும்!




ஒரு நாள் குழந்தையின் தாய் அவனை வேண்டாமென்று தடுத்து நிறுத்தினாள். ''குழந்தை பயப்படுதா?'' என்று அவன் கேட்க, குழந்தையின் தாய், ''இல்லை, எனக்கும் பயமாக இருக்குது!'' என்றாள் சிரித்தபடி.

— என். குணவதி, ஈரோடு.

○ ○ ○ ○

நிருபர்: உங்க கட்சி 'மாநாடு' நடைபெறும் இடத்தில் கேண்டீனோடு சேர்த்து ஜவுளிக் கடைக்கும் டெண்டர் கேட்டிருக்கீங்களே? ஏன்?





ரயிலில் டிக்கெட் பரிசோதகர்: என்ன சார், இரண்டாம் வகுப்பு டிக்கெட் வாங்கிட்டு முதல் வகுப்பிலே டிராவல் பண்ணுறீங்களே!

பிரயாணி: என்னமோ நாட்டிலே பெரிய பெரிய தலைவர்களெல்லாம் வகுப்பு வாதம், வகுப்புப் பிரிவினை கூடாதுன்னு சொல்றாங்களேன்னுதான்!

— டி. கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

○ ○ ○ ○



● சொந்த ஊருக்கு என்னுடைய வயதான அப்பாவைப் பார்க்க என் குடும்பத்துடன் சென்றிருந்தேன். காலில் விழுந்து நமஸ்காரம் செய்தோம்!

அவர், "கிடைப்பதை வைத்துக் கொண்டு திருப்தியுடன் வாழ்க." என ஆசீர்வதித்தார்.

உடனே என் பையன், "தாத்தா, மறுபடியும் அது மாதிரி சொல்லுங்க. நான் பரீட்சையில் பாஸ் மார்க் வாங்கித் திருப்தி அடைந்தாலும், எப்பொழுதும் முதல் மார்க்தான் வாங்க வேண்டும் என்று அப்பா, அம்மா தொந்தரவு பண்ணுறாங்க" என்றான்.

— ஸ்ரீராஜ், பம்பாய்.

○ ○ ○ ○



பயணி (கண்டக்டரிடம்): "ஜில்லரை தர்றீங்களா சார்?"

"அது என்னங்க ஜில்லரை?"

"இந்த வெயில் காலத்துல, பஸ்ஸுல ஏ. 'ஸி'. வசதிதான் இல்ல... சில்லறையை 'ஜில்'லறைன்னு சொல்லியாவது, குளிர்ந்துக்குவோமேன்னுதான்..."

— பி. ஜி. பி. இசக்கி, சிவசைலம்.

○ ○ ○ ○




● டி. வி. தொடரை வீட்டில் எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தோம்.

அந்த வாரத் தொடரை முக்கியமான கட்டத்தில் நிறுத்திவிட்டு, 'இந்த வார நிகழ்ச்சியை வழங்கியவர்கள்...' என்று டி. வி. யில் விளம்பரம் போட்டார்கள்.

முக்கியமான கட்டத்தில் கதை நின்று விட்டதே என்ற ஆதங்கத்தில் என் பத்து வயதுப் பையன் சொன்னான்: "ஆமா! இவங்க வழங்கறாங்க! இந்நிகழ்ச்சியை இப்போது நிறுத்தியவர்கள்னுல்ல சொல்லணும்!" என்றானே பார்க்கலாம்!

— ப. விஜயபாலன், சென்னை.

○ ○ ○ ○




(நண்பன் கிண்டலாக): "நேற்று நான் உன்னைப் போலீஸ் ஸ்டேஷனில் பார்த்தேனே!"

"ஆமாம்! நான் உன்னை ஜாமீனில் எடுக்க வந்தேனே, அதற்குள் மறந்துட்டியா?"

— தக்கோலம் புகாரி, சென்னை — 13.



# யானைக்கால் வியாதியைக் குணமாக்க முடியாதா?




**டாக்டர் பதில்கள்:**

● **சி. சந்திரசேகரன், வேலூர்:**

● **லும்பேகோ (Lumbago) என்றால் என்ன?**

●● **டாக்டர் வ. நம்பி, சென்னை — 4:**

● முதுகெலும்பில் ஏற்படுகிற பிடிப்பு அல்லது முதுகெலும்பைச் சுற்றியுள்ள தசைகளின் இறுக்கம் காரணமாக இடுப்பு வலியாக உருவாகும் நோய்.

● **இரா. முருகதாஸ், பனப்பாக்கம்:**

● **யானைக்கால் வியாதி என்பது என்ன? அது பரம்பரை வியாதியா? சத்துக் குறைவால் ஏற்படுவதா? பூரணமாகக் குணமாக்க முடியாதா?**

● யானைக்கால் வியாதி பரம்பரை நோய் அல்ல. சத்தான உணவுக்கும் இந்த வியாதிக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. கொசுக்களினால் உண்டாகிற வியாதி இது. சுற்றுப்புறச் சுகாதாரம் இல்லாததால் ஏற்படுகிற தொற்று நோய். ஆரம்ப நிலைமையாய் இருந்தால் பரிபூரணமாகக் குணமாக்கி விடலாம். முற்றிய நிலையிலும் கூட, இப்போதெல்லாம் அறுவைச் சிகிச்சை வாயிலாகக் குணமாக்கும் வாய்ப்பிருக்கிறது.

● **எஸ். ராஜன், கும்பகோணம்:**

● **சிலருக்குக் காரணமேயில்லாமல் அதிகமாக வியர்ப்பதற்கு என்ன காரணம்? சிலருக்கு உள்ளங்கால்களில் எப்போதும் வியர்த்த வண்ணமே இருப்பதற்கும் காரணம் என்ன? அது நல்லதுதானா? மருத்துவம் என்ன?**

● நரம்பு மண்டலத்தின், தன்னிச்சைப் பகுதியின் மாறுபட்ட செயல்பாட்டினால் இந்த வியர்ப்பு நோயாகவோ, நோய் இல்லாமலோ ஏற்படலாம். நோய் என்று நான் குறிப்பிடுவது டயபடீஸ் (நீரிழிவு), நரம்பு மண்டல உபாதை (இர்ரிடேஷன்) போன்றவை. நோய் இல்லாமல் என்று குறிப்பிடுவது, காய்ச்சல் விட்டு வியர்ப்பது அல்லது; பயம் — படபடப்பு காரணமாக வியர்ப்பது. நோய் காரணமாக இருந்தால் அதற்குரிய மருத்துவம் மட்டுமே போதுமானது. இந்த வியர்வையால் தொல்லையே தவிர, ஆபத்து ஏதும் கிடையாது. இதற்கென்று தனி மருத்துவம் கிடையாது.

● **எஸ். ஷாந்தினி, கோடிக்கரை:**

● **ஆண்களைவிடப் பெண்கள் நீண்ட காலத்திற்கு வாழ்கிறார்களே, காரணம் என்ன?**

●● **டாக்டர் சந்திரசேகர சாண்டில்யா, சென்னை — 28:**

● தினந்தோறும் ஆண்கள் அனுபவிக்கும் டென்ஷன், பிரச்னைகள் ஆகியவை பெரும்பாலான பெண்களின் சராசரி பிரச்னைகளை விட அதிகம். ஆகையால் அவர்களுடைய இதயம், மூளை, ரத்த அழுத்தம் போன்ற பகுதிகளும், செயல்பாடுகளும் பெருமளவு பாதிக்கப்படுகின்றன. மேலும் பெண்களை விட ஆண்களுக்குச் சிகரெட், மது போன்ற கெட்ட பழக்கங்கள் சற்று அதிகமாக இருக்கின்றன. இதனாலும் நோய்கள் அதிக அளவில் ஆண்களைப் பாதிக்கின்றன; விரைவிலேயே முதுமை நிலையை ஆண்கள் அடைகிறார்கள். மேலும், ஈஸ்ட்ரஜன் என்னும் ஹார்மோன், கருத்தரிக்கக் கூடிய வயதிலுள்ள பெண்களுக்கு இருப்பதால், அவர்களுக்கு மாரடைப்பு நோய்களிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது. இந்தப் பாதுகாப்பு இவர்களுக்குச் சுமார் ஐம்பது வயது வரையிலும்தான். அதற்குப் பிறகு, ஆண்களுக்கும் பெண்களுக்கும், ரத்த அழுத்தம், இதய நோய் முதலிய பாதிப்புகள் ஒரே மாதிரி யானவை தான்!

தொகுப்பு: **எஸ். வி. என்.**

# சோப்புக் கட்டியிலும் மலரும் சிற்பக் கலை!




**ப**க்கத்தில் வெளியாகியிருக்கும் சிற்பங்களெல்லாம் தெர்மோகோலிலும் புளியங் கொட்டையிலும், சாக்பீஸ் மற்றும் சோப்புக்கட்டிகளிலும் தான் உருவாக்கப் பட்டன என்றால் ஆச்சரியமாகத்தான் இருக்கும்.



டாக்டர் திவாகர்



சாக்பீஸில் விநாயகர்...

இந்த ஆச்சரியத்தைச் செய்து கொண்டிருப்பவர் சென்னை குழந்தைகள் மருத்துவமனையில் பணிபுரியும் டாக்டர் திவாகர். அவரது வீட்டுக்குச் சென்ற போது பல ஆச்சரியங்கள் காத்திருந்தன.

"இந்த மலர்க்கொத்தில் எத்தனை விதமான பூக்களைப் பார்க்கிறீர்கள்? இவையெல்லாமே சாக் பீசில் செதுக்கப்பட்டவைதான். இந்த சாக்கட்டி சங்கிலியைப் பாருங்கள்! ஒரு முழு சாக்பீஸையும் செதுக்கிச் செதுக்கி ஒன்றோடென்று இணைந்த சங்கிலியாக்கி விட்டேன். இதைச் செய்யக் கொஞ்சம் சிரமப்பட்டேன்!"

சுமார் முப்பது சாக்பீஸ்களை அப்படிப் பட்ட சங்கிலிகளாக அவர் காட்டியபோது ஆச்சரியமாய் இருந்தது. ஒவ்வொன்றையும் ஒவ்வொரு டெஸ்ட் டியூபுக்குள் போட்டுப் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார்.

ஷோகேஸில் இன்னொரு வரிசையில் குளியல் சோப்புக் கட்டியில் செதுக்கிய உருவங்கள். ஏசு, ஆஞ்சநேயர், பாரதமாதா, ராமர் பட்டாபிஷேகக் காட்சி, வள்ளி, தெய்வயானையுடன் மயில் மேல் காட்சியளிக்கும் முருகன், மீனாட்சி திருமணம், பத்துத் தலைகளுடன் ராவணன் என்று பட்டியல் விரிகிறது.

"எப்படி இத்தனை அழகாய்ச் சோப்பில் உருவங்களைச் செதுக்குகிறீர்கள்?"

"முதலில் சோப்பில் அவுட் லைன் போட்டுக் கொண்டு, பிளேடு, கத்தி இரண்டையும் பயன்படுத்தித் தேவையில்லாத சோப் பகுதிகளைக் கீறிக் கீறி அகற்ற வேண்டும். பொறுமை. அசாத்தியப் பொறுமை வேண்டும்!"

அடுத்து புளியங்கொட்டையில் செதுக்கிய உருவங்கள்: தசாவதாரம், தாயும் சேயும், நடராஜர், கிருஷ்ணர்... என்று.

"சோப்பு, சாக்பீஸ், தெர்மோகோல், புளியங்கொட்டை, என எதிலுமே பாதி செதுக்கிக் கொண்டிருக்கும் போது உடைந்தது; உருவம் சிதைந்தது என்று நடந்ததே இல்லை" என்கிறார் திவாகர்.

**இ**வருக்குக் குரு என்று யாரும் இல்லை. "நான் மருத்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போதே, அரசமர இலையில் ஓவியங்கள் வரைவேன். ஓர் அயல்நாட்டவரின் ஆர்டரின் பேரில்,

# அரசியல்வாதி

ஒரு நேர்மையான போலீஸ் அதிகாரி அந்த நகரத்திற்குத் தன் இளம் மனைவி, எட்டு வயதில் பெண் குழந்தை சகிதமாக மாற்றலாகி வருகிறார். அது ரவுடிகள் ராஜ்ஜியம். அங்கே போலீஸை மதிக்காத ஒரு முரடனை ரெண்டு தட்டுத் தட்டி அதட்ட, அவனுக்குப் பின்னணியில் இருக்கும் அரசியல்வாதியோடு மோதல் துவங்குகிறது. (சரி. சரி! மீதிக் கதையை உங்களால் யூகிக்க முடியும் என்பதை ஒத்துக் கொள்கிறேன்.)

இந்த மாதிரி அரசியல் மசாலாக்களில் குழந்தைகள் வந்தாலே அவர்களை பலி கொடுக்கப் போகிறார்கள் என்று ரொம்பச் சுலபமாகப் புரிந்து கொள்ள முடிகிறது. அதனால் பரிதாபம்



வருவதற்குப் பதில் எரிச்சல்தான் எட்டிப் பார்க்கிறது.

பானுசந்தர் ஒரு பறக்கும் சந்தர். மருத்துவமனையில் சண்டை போட்டுக் குற்றவாளிகளை மடக்குகையிலும் சரி, தகுதியில்லாத முதல் மந்திரிக்கு சல்யூட் அடிக்கும் போதும் சரி, அஞ்சலைப் பணயம் வைத்து அந்தக் கல்லூரி மாணவர் மிரட்டும் போது தத்தளிப்பதும் சரி... குறை வைக்கவில்லை. இதற்கு நேர் எதிர் யமுனா. கதாநாயகி. குள்ள உருவத்துடன் குதியோ குதித்துப் பாடல் காட்சிகள் என்று தண்டனையடா சாமி.

சாராயக் காண்டிராக்டர் முதல்வராகும் ஐடியாவை கின்னஸ் ரெக்கார்டுக்கு சிபாரிசு செய்யலாம். இவரின் கையாள் ரெட்டி என்கிற வித்யாசாகர், தலையைத் தடவிக் கொண்டு... "அண்ணா வேணும்னா மர்டர் பண்ணிடட்டுமாண்ணா" — என்று கேட்கும் போது திகில் வருவதை விட, சிரிப்புத்தான் வருகிறது.

அரசியல்வாதிகளுக்குப் பொருத்தமான ஆட்களைத் தேர்வு செய்திருத்தல், தனக்குப் போட வரும் ஊசியை டாக்டரையே போட்டுக் கொள்ளச் செய்தல், போலீஸ் பரபரப்பில் ஒரு பொது ஜனம் தலையிட்டு என்ன நடக்கிறது என்கிற நீதி விசாரணை... இப்படி ஆங்காங்கே ஓமப்பொடி தூவி இருக்கிறார்கள். மண்டல் கமிஷனை மையமாக வைத்து நிகழ்ச்சிகள், அப்போது நடந்த வன்முறைக் காட்சிகள், அது தொடர்பான கற்பனை, இவை கொஞ்சம் புதிய விஷயங்கள்: ஏறக்குறைய உண்மை?

கத்திரி வெயிலில் கடச்கட ம சாப்பிடுகிற அனுபவம்.

— சுந்தர்ஜி

---

இரண்டாயிரம் இலை ஓவியங்கள் வரைந்து அனுப்பி வைத்தேன். படித்துக் கொண்டிருந்த காலத்தில், இப்படி ஓவியம் தீட்டியது என் அப்பாவுக்குப் பிடிக்க வில்லை. அவரை ஒருநாள் ஹாஸ்டலைச் சுற்றி ஒரு ரவுண்டு அழைத்துக் கொண்டு போய்க் காட்டிவிட்டுச் சொன்னேன்: 'பார்த்தீர்களா? அத்தனை பேரும் வெட்டியாய்ப் பொழுதைக் கழித்துக் கொண்டிருக்கிற நேரத்தைத்தான் நான் இப்படி உருப்படியாய்ச் செலவழிக்கிறேன். அதனால் படிப்பில் என் கவனம் சிறிதும் குன்றாது.' அதைக் கேட்டு என் தந்தையும் சமாதானமாகிப் போய்விட்டார்.

"ஒரு முறை குடும்பநல முகாம் ஒன்றுக்கு டாக்டர் என்கிற முறையில் நான் அழைக்கப் பட்டிருந்தேன். அதற்கான பணியில் ஈடுபட்ட போது, மக்கள் தொகை பிரச்னையைச் சோப்பில் செதுக்கி, முகாமில் பார்வைக்கு வைத்தால் என்ன என்ற ஐடியா தோன்றியது. உடனே சோப்பும், பிளேடுமாய் உட்கார்ந்து விட்டேன். இரவு மூன்று மணி வரை கண்விழித்து நான் உருவாக்கியது தான் இது..." என்று அதைக் காட்டினார். அதில் ஒரு தாய். அவளைச் சுற்றி நான்கு குழந்தைகள். பாலுக்குத் தவிக்கும் ஐந்தாவது குழந்தை. போதாததற்கு வயிற்றில் ஆறாவது! 'இதற்கு நான் இட்ட பெயர் 'பாவம் பாரதம்.'

திவாகருடைய லட்சியம், தாம் உருவாக்கிய பலவிதமான உருவங்களையும் வைத்து ஒரு கண்காட்சி நடத்தி, விற்பனை செய்து, அதன் மூலம் கிடைப்பதை நல்ல காரியத்துக்கு நன்கொடையாய் அளிக்க வேண்டும் என்பதுதான்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

வாசகர் யோசனை:
ஜானகி மைந்தன்,
திருச்சி — 16.



# முதுமை



இன்று காலையில் சுந்தரிடமிருந்து ஃபோன் வந்தபோதே சுமதிக்குப் புரிந்தது. ஏதோ வழக்கமான அப்பா பிள்ளை தகராறு என்று. ஆனால் அது இவ்வளவு தூரம் போயிருக்கும் என்று எதிர் பார்க்கவில்லை.

"அப்பா ஆசிரமத்திலே போய் இருக்கப் போறாராம்..."

"எந்த ஆசிரமத்தில்?"

"சேவா சதன்னு இருக்கே... தாம்பரம் தாண்டி..."

"இதென்ன திடீர்னு?"

"திடீர்னு இல்லையாம்... பல நாளா நினைச்சுண்டு இருக்காராம். நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். நீ முடிஞ்சா இன்னிக்கோ, நாளைக்கோ வாயேன். நீ வந்து ஒரு வார்த்தை சொல்லிப் பாரு. எனக்கு ஆபீஸ்லே ஆடிட். தலைக்கு மேலே வேலை... நடுவுல இந்த டென்ஷன் வேற. மனுஷன் யாரையும் நிம்மதியாக இருக்க விட மாட்டார்."

"சரி. நான் வரேன். நீ பாட்டுக்கு உன் வேலையைப் பாரு... அப்பா பிடிவாதம் தான் தெரிஞ்சதாச்சே... எதுக்குக் கவலைப் படறே? அது சரி, ரஞ்சனி எப்படி இருக்கா? ராகுல் சமத்தா படிக்கிறானா?"

வழக்கமான குசல விசாரிப்புக்குப் பின் ஃபோனை கீழே வைத்ததும், அப்பாவைப் பற்றிய கவலை பிடித்துக் கொண்டது. அப்பா எப்பவுமே பிடிவாதக்காரர். மனதில் நினைத்ததை நடத்திக் காட்டுவார்.

இப்பவும் இந்தச் சேவா சதனில் சேருவதைப் பற்றிக் கொஞ்ச நாட்களாகச் சர்ச்சை நடந்து கொண்டிருந்தது. அங்கு முழு நேர வாலண்டியராக வேலை செய்ய அப்பா ஆசைப்படுகிறார். அது நகரத்திற்கு வெளியே இருந்ததால் தினம் போய் வர முடியாது. அங்கேயே தங்கி, அங்குள்ள அனாதைப் பிள்ளைகள், ஆதரவற்ற முதியவர்கள், அபலைப் பெண்களுக்குத் தன்னால் ஆனதை செய்ய வேண்டும். அவர்கள் பராமரிப்பில் சிறு பங்காவது ஏற்க வேண்டும். அங்கு போய் அவர் இருப்பது சுந்தருக்குப் பிடிக்கவில்லை. 'போகாதீர்கள்' என்று சுமதி சொன்னால் மட்டும் கேட்பாரா? சந்தேகம்தான். 'எதற்கும் சொல்லிப் பார்க்க வேண்டும்.

சாப்பிட்டவுடன் வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பினாள். இப்ப கிளம்பினால் தான் சாயந்திரம் பிள்ளைகள் ஸ்கூலிலிருந்து திரும்பு முன் வீட்டிற்கு வர முடியும். பஸ்ஸிலும் இப்போது கூட்டம் இருக்காது. வெயிலைப் பார்த்தால் முடியாது.

கொளுத்தும் வெயிலில் பஸ் ஸ்டாப்பிலிருந்து வீடு வரை நடந்ததில் வியர்த்துக் கொட்டியது. ஊற்றுத் தண்ணீரில் கை கால், முகம் கழுவிய பின், அண்ணி தந்த சில்லென்ற சர்பத் குடித்ததில் புத்துணர்ச்சி வந்தது. கூடவே கொஞ்சம் தன்னம்பிக்கையும் வந்தது.

சுற்றி வளைத்துக் கொஞ்ச நேரம் பேசி விட்டு விஷயத்துக்கு வந்தாள்.

"ஏதோ ஆசிரமத்தில போய் இருக்கப் போறதாச் சொன்னேளா? ஏம்பா இப்படி வயசான காலத்தில - தனியா அங்கே..."

"எல்லா மனுஷனும் எப்பவுமே தனி தாம்மா. அப்படி என்ன வயசாச்சு. அறுபத் தஞ்சுதானே! ஒவ்வொருத்தர் ஃபாரின்ல

பானுகுமார்

இந்த வயசிலே கல்யாணம் பண்ணிக்கறா."

"போங்கப்பா, நான் கவலையாப் பேசறேன். நீங்க ஜோக் அடிக்கறேள். சுந்தர் கூட ரொம்ப டென்ஷனா இருக்கான். வயசான அப்பாக்கு அங்கே என்ன வேலை..."

"ஏம்மா, வயசானா வேலை இருக்கக் கூடாதா? எனக்குன்னு சில ஆசைகள் இருக்கு. அதை என் சரீரம் ஒத்துழைக்கறச்சே செஞ்சாத்தான் உண்டு.

"வயசான காலத்திலே கிருஷ்ணா ராமான்னு..."

"அதை விட ஆண்டவன் குழந்தைகளுக்குச் சேவை செய்யறதிலே புண்ணியம் அதிகம்மா. என் மனசிலே ஒரு ஏக்கம் இருக்கு... வாழ்க்கை முழுக்க எனக்காக, என் குடும்பத்துக்காக மட்டும் வாழ்ந்திருக்கேன்னு... சின்ன வயசிலே தாய் தந்தை ஆதிக்கம், கண்டிப்பு, படிப்பு, வேலை, பின்பு கல்யாணம், குடும்பப் பொறுப்பு, ரிடையர் ஆற வரைக்கும் உழைச்சாச்சு. உத்தியோகத்தில மேல வரணும்னு ஆபீஸ்லே நாயா உழைப்பு. பிள்ளை, குடும்பம், சுற்றம் எல்லாம் முன்னேற வீட்டிலேயும் உழைப்பு. உன்னோட படிப்பு, கல்யாணம், சுந்தர் படிப்பு, அவன் கல்யாணம்... எல்லாக் கடமையும் ஒண்ணொண்ணா முடிஞ்சு, ரிடையர் ஆயாச்சு. அப்புறம் வேலைக்குப் போற மாட்டுப் பெண். பேரக் குழந்தையைப் பார்த்துண்டு வீட்டு வேலை செய்யும் உன் அம்மாக்கு என்னாலான உதவி. பிறகு அவள் ஒரேயடியாய்ப் படுத்து விட, அவளுக்குப் பணிவிடை செஞ்சதிலே ஒரு வருஷம் போல ஓடி விட்டது. அவள் கண்ணை மூடிய போது துக்கம். அதன் பிறகு எனக்கு என்ன கடமை இருக்குன்னு உணரத் தொடங்கினேன்..."

"அதுக்குத்தாம்பா சொல்றோம். எதுக்கு இங்கே எங்க எல்லாரையும் விட்டுட்டு..."

"இங்கே இனிமே எனக்குக் கடமை, பந்தம் ஒன்றுமில்லை. அம்மா படுத்தவுடன் உன் அண்ணி வேலையை விட்டாச்சு. அவரவர் குடும்பத்தைப் பராமரிக்கிற சாமர்த்தியம் உங்க ரெண்டு பேருக்கும் இருக்கு."

"அதனால...? எங்க கூட இருக்கக் கூடாதா?"

"அதுக்கில்லை... எப்பவுமே சுயநலமா இருந்துட்டேன். வர வர... சமூகத்துக்கு ஒண்ணும் செய்யலேங்கற உணர்ச்சி தோண்றது. பணத்தால மட்டுமில்லாம... இந்த சரீரத்தாலேயும் பயன்படணும்னு தோண்றது. முடிந்த அளவு மனித மேம்பாட்டுக்குப் பாடுபடணும்..."

"ஏம்பா, இங்கேயே இருந்தா மாத்திரம் சமூக சேவை பண்ண முடியாதா?"

"இருக்கலாம்தான். ஆனால் என்னையும் அறியாம குடும்பச் சக்கரத்திலே அடிபட்டு விடுவேன்."

"இருந்தாலும் ஊர் உலகம் என்னப்பா சொல்லும்?"

"அதைப் பத்தி என்னம்மா? எனக்குத் தெரியும்... உங்களைப் பற்றி, ஊர் என்ன பேசினா என்ன?"

"திடீர்னு நீங்க இந்த முடிவு எடுத்தது... அதைத் தாங்கிக்க முடியலே."

"இது திடீர் முடிவு இல்லேம்மா! என்னைப் பொறுத்தவரை மனுஷ வாழ்க்கை மூணு பகுதி. முதல் பகுதி தன்னையே தகுதி உள்ளவனாக ஆக்கறது. தன் படிப்பு, வேலை, முன்னேற்றம். அடுத்தது தன்னைச் சார்ந்தவர்களுக்காக உழைப்பது, அவர்கள் முன்னேற வழி செய்வது. இந்தக் கடமைகள் முடிந்ததும் இந்தப் பந்தங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, வாழ்க்கை நமக்குத் தந்திருக்கிற நன்மைகளுக்கு நன்றி சொல்ற மாதிரி மற்றவர்களுக்காக – மனித சமுதாயத்திற்காகச் சின்ன வகையிலாவது உபயோகப்படுவது. இது மனுஷனோட ஆத்ம வளர்ச்சிக்கு அவசியம். உடம்பிலே பலம் இருக்கற ஒவ்வொருவரும் தன்னால் ஆனதைச் செய்யணும்மா. வயசாச்சேன்னு முடங்கி விட்டா ஆத்மாவும் குறுகி விடும். என்னைக் கேட்டா இதுவும் ஒரு வகை சந்நியாசம்தான். நான் நீர யோசிச்சுத்தான் இந்த முடிவுக்கு வந்தேன். இதைச் சுந்தருக்கு எடுத்துச் சொல்லு. அவன் புரியாம குதிக்கறான்."

"சொல்றேம்பா..." என்ற சுமதிக்கு அப்பாவை நினைத்துப் பெருமையாக இருந்தது.

## ஃப்ரிஜ் பரிசு: கூப்பன் நெ.1

**நேற்று வரை நந்தவனம் தொடர்கதையில் இந்த வாரம் வேண்டுமென்றே செய்யப்பட்ட......**

**தவறு:** ____________________ **திருத்தம்:** ____________________

____________________________________________

# தக்கசமயத்தில் 'ஜில்' பக்கம்!

○ குறுக்கு வழியில் பதவியைப் பிடிக்க வேண்டும் என்கிற எண்ணம்தான் பெரும்பாலான அரசியல் கட்சிகளிடம் காணப் படுகிறது என்பதைத் தலையங்கத் தில் மிகவும் லாவகமாகச் சொல் லியவிதம் அருமை! மக்களைக் கவர வேண்டும் என்கிற நோக் கோடு அவர்கள் போடுகிற திட்டங் கள் பற்றிய தங்களின் விளக்கம் அற்புதமாய் இருந்தது!

மருதூர், சிந. கருணாநிதி.

○ அறிவாலயத்தில் இறுக்கமான அமைதியா? தலைமையே இறுக்க மான அமைதியாக இருக்கும் போது தொண்டர்கள் மட்டும் எப்படி இருப்பார்கள்?

சிதம்பரம், என். ஆர். பாஸ்கரன்.

○ அறிவாலயத்தின் அமைதி அவர்களுடைய திட்டமிட்ட செய லைக் காட்டுகிறது. தி. மு. க. வெற்றி பெற கடுமையாக உழைக்க முடிவு செய்திருப்பதையே அவர் களுடைய 'அமைதி' புலப்படுத்து கிறது.

சென்னை — 101, தா. பாலசுப்பிரமணியன்.

○ மாடலிங் என்பது என்ன, அத் தொழிலில் உள்ள சிரமங்கள் என் னென்ன என்பதை மிஸ் இந்தியா விடமும் இளைஞர் ஆனந்திடமும் கேட்டு நன்றாகவே புரிய வைத் திருக்கிறீர்கள். மாடலிங் என் றாலே தவறான தொழில் என்ற பொதுவான கண்ணோட்டத்தைத் தகர்த்தெறியச் செய்யும் விதத்தில் அமைந்திருந்தது கட்டுரை.

அரூர், மு. மதிவாணன்.

○ சென்னை நகரில் பெருகி வரும் கொள்ளைகளைப் பற்றிப் படித்த போது, வியப்பாகத்தானி ருக்கிறது. திறமை வாய்ந்த நமது காவல் துறை மட்டும், மனம் வைத் துத் திறமையாகச் செயல்பட்டால் குற்றவாளிகளை நிச்சயம் கூண் டில் ஏற்ற முடியாமலா போய் விடும்?

கும்பகோணம், புலவர். எஸ். கே. மூர்த்தி.

○ தக்க சமயத்தில், 'ஜில் பக்கம்' வெளியிட்டுக் குளிர்ச்சியூட்டி விட்டீர்கள்!

மேற்கு மாம்பலம், சைதை. ஆர். முரளி.

○ இளம் சிறுவர்களின் பொது அறிவை வளர்க்கும் சுற்றுலா மூலம் கிராமத்தின் ஒற்றுமைக்கும் வலுவூட்டும் கருப்பூர் கிராமத்து முத்தமிழ் நற்பணி மன்றத்தினரின் திட்டமிட்ட செயல்திறன் பிற கிராமங்களுக்கு ஒரு நல்ல முன்னு தாரணமாகத் திகழ்வதோடு, கூடவே மதுவிலக்கினையும் அமுல் படுத்தியிருக்கும் திறமை வியக்க வைக்கிறது.

கும்பகோணம், பால. கிருஷ்ண மூர்த்தி.

○ அப்பாடா! சீதாப் பாட்டி, அப்புசாமித் தாத்தாவை, "நீங்கள் என் தெய்வம்" என்று கூறியதைக் கேட்டு, 'அப்புசாமி மன்ற' ரசிகர் களாகிய நாங்கள் மெய்சிலிர்த் தோம். 'வசிஷ்டர் வாயால் பிரம்ம ரிஷி' என்றால் சும்மாவா!

ஆவடிநூர், இரா. கந்தையா.

○ கணவன், மனைவி உறவுக் குள்ள நெருக்கமே பரஸ்பர நம்பிக் கையும் அன்பும்தான். அந்த நம்பிக்கை பொய்த்துப் போன தால், கணவன் வீட்டிற்கு வர முடியாது என்று கூறிய சாந்தியின் துணிச்சல் ஆண்களுக்கு ஒரு பாடமாக அமையட்டும். 'இருளில் துளிர்த்தது விழிப்பு' எழுதிய கிருஷ்ணாவுக்கு என் பாராட்டுக் கள்.

கோயமுத்தூர், ஏ. ஜி. கல்யாண சுந்தரம்.

○ இன்றைய சினிமாக்களின் விதவிதமான டைட்டில்களையும், வினோதமான கதைகளையும், நாசூக்காகக் கிண்டலடித்து எழுதப்பட்டிருந்த கார்த்தியின் 'செங்கருளை தங்கபாலு' கதை. வரிக்கு வரி சிரிப்பை வரவழைத் தது.

நெய்வேலி — 3, ப. உத்தண்ட ராமன்.

○ மருத்துவமா? வியாபாரமா? ஆசிரியர் பக்கத்தில் நீங்கள் எழுதி யது மிகவும் சரியானது. மருத்துவத் துறை மற்றொரு வியாபாரத் துறை யாகத்தான் மாறி வருகிறது.

சென்னை — 11, பி. கே. காஞ்சனா கண்ணன்.

## வட்டமேஜை

○ டாக்டர்கள் தெய்வத்திற்குச் சமமானவர்கள் அல்ல. ஒரு நோயாளியை அந் நோயின் பிடியிலிருந்து காப்பாற்ற எந்த மருத்துவருமே தம்மால் முடிந்த வரை முயற்சி செய்வார். அவரது ஆற்றலையும் மீறி, நோயின் தீவிரத்தைப் பொறுத்து, சில நேரங்களில் முடிவு அமைந்து விடுகிறது. எமர்ஜென்ஸி கேஸ்கள் தவிர, ஓர் அறுவைச் சிகிச்சை நடப்பதற்கு முன்னால், அந் நோயாளியை முழுவதும் பரிசோதித்த பின்னரே அவருக்கு அறுவை சிகிச்சை செய்யத் தீர்மானிக்கப் படுகிறது. ஆனால் அந் நோயாளி அறுவைச் சிகிச் சைக்கு முன்னால் செலுத்தப்படும் மருந்துகளுக்கோ அல்லது மயக்க மருந்து செலுத்தும்போதோ எதிர் பாராமல் வேறு வகையில் reaction ஆகி (idiosyncr- acy to drugs) சிக்கல் ஏற்படுத்தலாம் — சமயத்தில் மரணம் கூட சம்பவிக்கலாம். இக் காரணங்களினால் தான் எந்த ஒரு பெரிய அறுவைச் சிகிச்சைக்கு முன்னரும் நோய் மற்றும் சிகிச்சையின் தன்மையை நோயாளியிடம் எடுத்துக் கூறி ஒப்புதல் வாங்கப் படும். அதன் பின்னரே அறுவைச் சிகிச்சை நடை பெறும். ஒரு அறுவைச் சிகிச்சையின் போது ஏற் படும் மரணத்தின் காரணத்தை இன்னொரு மருத்து வரால்தான் அறிய முடியும். அம் மரணம் எதனால் ஏற்பட்டது என்பதை 'Indian Medical Council' போன்ற அமைப்புக்களின் மூலம் பல வருட பயிற்சி யுள்ள பெரிய மருத்துவர்களைக் கொண்டே விசாரணை நடத்தப்பட வேண்டும்.

சென்னை — 87, டாக்டர். பூமா கிரிதர்.

○ சில பல் வியாதிகளுக்கான மருந்துகளைச் சூயிங்கம் வாயிலாக வழங்கினால் அவை பற்களை யும் ஈறுகளையும் நேரடியாக முழுமையாகச் சென்ற டைய உதவிகரமாய் இருக்கும். மிதமான அளவில் உபயோகித்தால் சாதாரண சூயிங்கம்மினால் சாதக, பாதக விளைவுகள் ஏதும் ஏற்படாது.

சென்னை — 3, டாக்டர். ஏ. பரமேஸ்வரன்.

# அ.தி.மு.க.வில் நெ. 2 யார்?









• புதுக் கலயம்... • உ. பி. தொடர்... • கட்சி உடைபவர்... • சிக்க வாய்ப்பு... • சரியான கருத்து... • அம்மா நிழலில்... • பிரதமர் யோகம்... • பிரதமருடன் பேச்சு...

o **லவ்லி ராஜா, கரியாக்கவுண்டனூர்.**

? **புது நெல்லு, புது நாத்து — பாரதிராஜா எப்படி?**

! புதுக்கலயம்; பழைய சோறு.

o **ஆறுமுக ராஜன், புளியங்குடி.**

? **டி. ஆரின் தேசியத் தமிழ் முன்னணி பற்றி?**

! பிரதமருடன் பேச்சு வார்த்தை நடத்தும் அளவு அவர் உயர்ந்திருக்கிறாரா? அல்லது, டி. ராஜேந்தர் ஆதரவாவது கிடைக்கட்டும் என்ற அளவுக்குப் பிரதமரின் கட்சி நொடித்துப் போயிருக்கிறதா? — ஆராய்ச்சிக்குரியது.

o **எஸ். ரவீந்திரன், சென்னை — 41.**

? **அடுத்த ஏழு ஆண்டுகளுக்குப் பிரதமராக இருக்கக் கூடிய யோகம் சந்திரசேகருக்கு இருப்பதாகப் பிரபல ஜோசியர்கள் கூறியிருக்கிறார்களே?**

! ஐயோ! மறுபடி ஆட்சிக் கவிழ்ப்பும், கட்சி உடைப்புக்களும் உள்ளடக்கிய அரசியல் சூழ்ச்சிகளா!

o **ப. விஜயாலயன், திருவான்மியூர்.**

? **அம்மா நிழலில் ஒண்டி வரும் நாவலரின் எதிர்காலம் பிரகாசமாய் இருக்கும் என்று நம்பலாமா?**

! அம்மா மனசு வைத்து ஸ்விட்ச் போட்டால் பிரகாசம்தான்; மனசு மாறி அணைத்துவிட்டால் கும்மிருட்டுத்தான்.

o **தெ. க. இலியன், வத்திராயிருப்பு.**

? **'உத்தரப்பிரதேசத்தில் முலாயம்சிங் யாதவ் அரசுக்கு இ. காங்கிரஸ் தனது ஆதரவை விலக்கிக் கொண்டது, அந்தக் கட்சியின் நம்பிக்கைத் துரோகக் கலாசாரத்தைக் காட்டுகிறது' என்று கருணாநிதி கருத்துத் தெரிவித்துள்ளாரே?**

! சரிதான். உ. பி.க்கு ராஜீவ் சென்ற போது அவருக்குக் கிடைத்த வரவேற்பு ஏற்படுத்திய தவறான தன்னம்பிக்கையின் விளைவாக உருவான நம்பிக்கைத் துரோகம் அது.

o **கே. கணேஷ், சென்னை.**

? **தமிழகத்தின் அடுத்த முதல்வராக யார் வர வேண்டும் என்று விரும்புகிறீர்கள்?**

! ஹூம்... என் விருப்பம் என்னவாயிருந்து என்ன பயன்!

o **தே. தாழைப்பிரபு, குடியாத்தம்.**

? **மீண்டும் கலைஞரே முதல்வர் ஆவது போல் கனவு கண்டேன், பலிக்குமா?**

! அது பகல் கனவா? முன் மாலைக் கனவா? அதிகாலைக் கனவா? நள்ளிரவுக் கனவா? கலரா? கருப்பு — வெளுப்பா?

விழித்து எழுந்ததும் வியர்த்து விட்டதா? பயத்தில் அலறினீரா? என்றெல்லாம் தெரியாமல் பலன் சொல்வது கஷ்டம்!

o **அ. முஸ்தபா, தக்கோலம்.**

? **சுயமரியாதை, தன்மானம் போன்றவை இன்றைய அரசியல்வாதிகளுக்குப் பொருந்துமா?**

! எஸ். டி. எஸ்., நெடுஞ்செழியன், வீரப்பன் ஆகியோரைக் கேட்டுப் பார்ப்பது தானே!

o **எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.**

? **பத்திரிகை சர்வே (கணிப்பு) — சோதிடர் கருத்து — எதற்கு வலிமை அதிகம்?**

! இரண்டிலுமே அறிவியல் கால்; அதிர்ஷ்டம் முக்கால்.

o **ஜோ. குப்புசாமி, சேலம்.**

? **'சுப்பிரமணியசுவாமி ஓர் அரசியல் கோமாளி' என்று அன்பரசு கூறுகிறாரே?**

! மேனகா உபயத்தால் சர்க்கஸ் கோமாளிகளுக்கு ஆபத்து வந்துவிட்ட நேரத்தில் அரசியல் கோமாளிகளுக்குக் கிராக்கி அதிகம். நமக்கும் சிரிக்க வாய்ப்புக்கள் தேவை தானே!

o **வீ. மீனாட்சி, நெய்வேலி. ***

? **ரயில் நிலையங்களில் அறிஞர்களின் பொன்மொழிகளை எழுதி வைக்க அரசு தீர்மானித்துள்ளதே?**

! நேரம் தவறாமை உள்படப் பல பொன்மொழிகள் ரயில்வேக்கு ஒத்து வராதவை. ஜாக்கிரதையாகப் பொன்மொழிகளைத் தேர்ந்தெடுக்கட்டும்.

o **எஸ். அருண், காரைக்கால்.**

? **அரசியல் பிரிவு 356 நீக்கப்படத்தான் வேண்டுமா?**

! கூடாது! காரண காரியத்தோடுதான் அதை அரசியல் சாசனத்தை உருவாக்கிய அறிஞர்கள் வைத்திருக்கிறார்கள். துஷ்பிரயோகமாகாமல் கவனித்துக் கொண்டால் போதும். அதற்கேற்பச் சில சிறு திருத்தங்களை வேண்டுமானால் செய்யலாம்.

o **ஏ. ஜி. கல்யாணசுந்தரம், கோவை.**

? **டி. வி. யில் ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் தொடர்களில் உங்களைக் கவர்ந்தது?**

! இப்போதைக்குப் பாபநாசம் சிவன் பற்றிய தொடர். தமிழிசைக்கு அருந்தொண்டாற்றிய வாக்கேயக்காரர் அவர். அதாவது கர்நாடக இசையை நன்கு பயின்று, அதன் பிறகு இசையோடு இணைந்த அருமையான தமிழ்ப் பாடல்களை ஏராளமாக இயற்றியவர். நீண்ட



காலம் வாழ்ந்து, இசை உலகில் பெரும் பெயரும் புகழும் பெற்று, நிரந்தர இடம் வகுத்துக் கொண்டவர். எனவே சங்கீத நடனக் கலைஞர்களின் பூரண ஒத்துழைப்பு தயாரிப்பாளர்களுக்குக் கிடைத்திருக்கிறது. அதனால் நிகழ்ச்சியின் ரசனை கூடுகிறது. திரைப்பட உலகுக்கும் ஏராளமான பாடல்களை இயற்றி அளித்தவர் சிவன். எனவே நிகழ்ச்சியில் சினிமாக் காட்சிகளும் இடம் பெற்று ஆர்வம் ஊட்டுகின்றன. அவரது வாழ்க்கை முக்கிய நிகழ்ச்சிகளாகப் புகைப்படங்களில் விரிகிறது. சிவனைப் பற்றிப் பலரும் இடையிடையே அபிப்பிராயம் கூறுகிறார்கள். அவரது அடக்கம், பக்தி, இசை ஞானம் முதலியன இந்தக் கருத்துக்களில் இடம் பெறுகின்றன. (என்றாலும் இன்னொரு தியாகையர் என்பது மிகை.) சிவன் சமஸ்கிருத மொழியிலும் பல பாடல்களை இயற்றியுள்ளார் என்பது இந்நிகழ்ச்சியின் மூலம் தெரிய வந்த இனிய வியப்பு.

o **டி. மகி, வீரராக்கியம்.**

? **அத்வானி பிரதமராகும் வாய்ப்பு இந்தத் தேர்தல் மூலம் கிடைக்குமா?**

! அது எனக்குத் தெரியாது; ஆனால் 'இந்துத்துவம்' என்று மட்டும் பேசாவிட்டால் அவரைவிடப் பிரதமராகத் தகுதி உடையவர் வேறு யாரும் இல்லை, என்பது தெரியும்.

o **ஆர். எஸ். நாராயணன், சென்னை.**

? **சமீபத்தில் தங்கள் மனத்தை நெருடிய நிகழ்ச்சி?**

! உத்தரப் பிரதேச கிராமம் ஒன்றில் கிராமப் பஞ்சாயத்து, காதலர்களைத் தூக்கிலே போட்ட கொடுமைதான்.

o **எஸ். பிரியா, பாளையங்கோட்டை.**

? **அ. தி. மு. க. வில் நெ. 2 யார்?**

! அப்படி ஓர் இடம் அக்கட்சியில் இருக்கிறதா என்ன!

o **ஜி. இந்திரா, திருச்சி.**

? **டாக்ஸி, ஆட்டோ கட்டணம் திடீரென்று ஏறிவிட்டதே?**

! பெட்ரோல் விலை எப்போதோ ஏறிவிட்டதே!

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**வீ. மீனாட்சி,**
**C-46, பொன்னியார் சாலை,**
**வட்டம் — 25,**
**நெய்வேலி — 607 803.**

ஆசிரியர் பக்கம்:

# கசப்பும் இனிப்பும் கருணாநிதியும்!

"வெற்றி முகட்டில் ஏறிடு! வீரத் திருமுகங் காட்டிடு!' என்ற தலைப்பில் உடன் பிறப்புக்களுக்கு உற்சாகமூட்டிக் கலைஞர் கடிதம் எழுதியிருக்கிறார், அவரது கட்சி ஏட்டில். இப்படி அவர் தொண்டர் களை ஊக்குவிக்கக் கல்கி ஒரு காரணமாக அமைந்தது என்பதில் மகிழ்ச்சி அடை கிறோம்!

நமது நிருபர், 'போயஸ் தோட்டம் பக்கம் கலகலப்பாக இருக்கிறது' என்றும் 'அறி வாலயத்தில் இறுக்கமான அமைதி நிலவு கிறது' என்றும் எழுதியதுதான் கலைஞரை உசுப்பி விட்டு, ஒரு நீண்ட கடிதம் எழுத வைத்திருக்கிறது! எனவே, கலைஞர் கடிதத்தைப் படித்ததால் உடன்பிறப்புக்கள் ஊக்கமடைந்து அபாரமாக உழைக்க, கலைஞரே மீண்டும் முதல்வர் ஆனார் என்றால் அந்தச் சாதனையில் கல்கிக்கும் ஒரு சிறு பங்கு உண்டு என்பதை இப்போதே சொல்லி வைக்கிறோம்!

ஆனால் அப்படி ஒரு சாதனை நிகழும் என்ற நம்பிக்கையை நடந்து முடிந்த நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகள் நமக்கு அளிக்கவில்லை என்பதுதான் யதார்த்த நிலை.

'போயஸ் தோட்டம் பக்கம் கலகலப்பு' என்று எழுதியதால் கல்கி அ. தி. மு. க. ஆதரவுப் பத்திரிகை ஆகி விடாது. 'அறிவாலயம் பக்கம் இறுக்கமான அமைதி' என்று எழுதியதால் கல்கி தி. மு. க. வின் எதிரியும் ஆகி விடாது. கல்கி எப்போதுமே தனித்தனியே ஒவ்வொரு பிரச்னையையும் அலசி, தனது கருத்தை வெளியிட்டு வருகிறதேயொழிய, எந்த ஒரு கட்சிக் கண்ணோட்டத்துடனும் எதையும் எழுதிய தில்லை.

கலைஞர் பதவிக்கு வந்த போது தொழில் வளர்ச்சியில் அவருக்கு இருந்த ஆர்வமும்; போஃபோர்ஸை விடப் பயங்கர மான சாராய சாம்ராஜ்ய ஊழலை அவர் அம்பலப்படுத்தி, அதற்கு முற்றுப் புள்ளி வைத்ததும்; இன்னும் பலவும் நமது பாராட் டுக்குள்ளாயின. ஆனால் அதே கருணா நிதியை, 'விடுதலைப் புலிகள் விஷயத்தில் அனுதாபம் வேண்டாம்' என்று எச்சரித்தது கல்கி. மதுவிலக்கை அவர் ரத்து செய்த போது கடுமையாகத் தாக்கியது. கலைஞர் சொல்வது, செய்வது எல்லாவற்றையும் ஆமோதிப்பதானால் கல்கி, தி. மு. க. வின் கட்சிப் பத்திரிகை ஆகி விடும்.

"தேசிய முன்னணி, தி. மு. க., இடது சாரி என்றால் கல்கிக்குக் கசப்புத்தானே" என்கிறார் கருணாநிதி. தவறு. தேவிலா லின் ஒரு தந்திரத்தில் வி. பி. சிங் பதவிக்கு வந்த விதம் நமக்குக் கசப்புணர்வை அளித்த போதிலும் வி. பி. சிங் பிரதமராக இருந்து செய்த பல காரியங்கள் இனிக்கவே செய் தன. அவற்றைப் பாராட்டவும் நாம் தவற வில்லை. ஆனால் ஆரம்ப சூரத்தனம் போகப் போக மெத்தெனமாக மாற, கடைசியில் ஜனதா தளம் உட்பூசலில் பிளவுபட்டுத் தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டால் அதற்கு நாம் என்ன செய்ய முடியும்? மண்டல் கமிஷன் அறிக்கையை நன்கு யோசியாமல் அவசரம் அவசரமாக வி. பி. சிங் அமுல்படுத்த முற்பட்டதுதான் அவர் வீழ்ச்சிக்கு முக்கிய காரணமாயிற்றே தவிர, கல்கியின் எதிர்ப்பு அல்ல!

இட ஒதுக்கீட்டினைக் கல்கி என்றுமே எதிர்த்ததில்லை. 'அதையே அரசியல்வாதி கள் ஒரு வோட்டுப் பிடிக்கும் தந்திரமாகக் கையாண்டு, நிரந்தரப்படுத்தி விடக் கூடாது; அனைவருக்கும் 'சம' வாய்ப்பு என்பதே இறுதி லட்சியமாக இருக்க வேண்டும்' என்று மட்டுமே நிபந்தனை போடுகிறது.

இப்போது கூட வி. பி. சிங்கும் கருணா நிதியும், "இட ஒதுக்கீடு என்பது ஒரு தாற்காலிக விஷயமே. அதற்கு அவசியமில் லாத அளவு மக்களின் படிப்பறிவு பெருக வும், வாழ்க்கைத் தரம் உயரவும் யதார்த்த மான, உருப்படியான கொள்கைகளுடனும் திட்டங்களுடனும் வாக்காளர்களை அணுகு கிறோம்" என்று கூறட்டும்; தீக்குளிப்பா நிகழும்? காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை எல்லோரிடத்திலும் ஒரு புத்துணர்ச்சி அல்லவா பிறக்கும்!

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளி யிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. தொலைபேசி: ஆசிரியர் குழு அலுவலகம்: 2344145; சர்க்குலேஷன் மானேஜர்: 2344190; விளம்பரம் — சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/-; விமானத் தபால்: ரூ. 350/-.

Registered as newspaper in Srilanka



உயர் நட்சத்திரத் தரம்




நல்லொளி பரப்பிலே நம்பர் 1 : ஸீமா.
நட்சத்திர நடிகை நம்பர் 1 : ஶ்ரீதேவி.
சரிநிகர் மின்னும் இலட்சியத் தரம் :
உச்ச நட்சத்திரம்.
நீடிக்கும் சுடரொளியின் ஆதிக்கம்,
போற்றப்படும் இரு மணிகள்...
ஆற்றல் இருப்பதால் ஊற்றெடுப்பவை
உயர்வினாலே உச்சத்தில் ஆள்பவை.

# ஸீமா®




பல்பு, டியூப்லைட்